**மொழிபெயர்ப்பு நேர்காணல்கள்**

**அன்பரசு சண்முகம்**




பதிப்பாசிரியர்: அன்பரசு சண்முகம்

நூல் வடிவமைப்பு: ஆரா பிரஸ், சென்னை

வெளியீட்டு அனுசரணை:
Komalimedai.blogspot.com

தொடர்புக்கு: Arapress@protonmail.com

அட்டை வடிவமைப்பில் உதவி: Canva.com

அட்டைப்படம்: pathways





இனிய உறவுகளுக்கு, வணக்கம்.

இந்த நூலில் 21 மொழிபெயர்ப்பு நேர்காணல்கள் இடம்பெற்று உள்ளன. இவை நடப்பு காலத்தின் அரசியல், சமூகம், விளையாட்டு, சினிமா என பல்வேறு தளங்களிலும் நடக்கும் மாற்றங்களை பதிவு செய்கிறது. இதற்கு டைம்ஸ் ஆஃப் இந்தியா, அவுட்லுக், டெக்கன் கிரானிக்கல், இந்தியன்

எக்ஸ்பிரஸ் ஆகிய இதழ்களும் அச்சு மற்றும் இணைய நாளிதழ்களும் உதவின. அவர்களுக்கு நன்றி.

அன்பரசு சண்முகம்
arapress@protonmail.com

1

## ”சமூக பாதுகாப்பை உறுதிப்படுத்த வேண்டியது அரசியல்வாதிகள்தான்”

உலக வங்கியின் சமூக பாதுகாப்பு மற்றும் வேலைகள் ஆகிய பிரிவின் இயக்குநர் மைக்கேல் ருட்கோவ்ஸ்கி. அவரிடம் எதிர்கால வேலைவாய்ப்புகள் பற்றி பேசினோம்.

**வேலைவாய்ப்பு சந்தையில் அரசியல்வாதிகளின் பங்கு என்ன?**

மக்களுக்கு தேவையான வேலைவாய்ப்பு, செல்வம் ஆகியவற்றுக்கு அரசியல்வாதிகள் முக்கியத்துவம் lதரவேண்டும். அவர்களே இதற்கு பொறுப்பு. உங்களது தாத்தா காலத்து வேலை வாய்ப்புச் சந்தை தற்போது

கிடையாது. எதிர்காலத்தில் இந்த சந்தைக்கு மதிப்பும், பாதுகாப்பும் ஏற்படுத்துவது முக்கியம். இவற்றை பிரபலப்படுத்தி தொழில்முனைவோர்களை ஈர்ப்பது அரசியல்வாதிகளின் பொறுப்பு.

## எதிர்கால வேலைவாய்ப்புகள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

மக்களுக்கான வேலைவாய்ப்புகள் பற்றி நான் நம்பிக்கையுடனே இருக்கிறேன். காரணம் தொழில்நுட்ப பாய்ச்சல். உலகில் புதிய தொழில்நுட்பங்கள் உள்ளே நுழையும் போது வேலையிழப்பு பற்றிய அச்சம் இருக்கும். ஆனால் பின்னாளில் அதே தொழில்நுட்பத்தால் அதிக வேலைவாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன. உதாரணமாக 19ஆம் நூற்றாண்டில் லுட்டிடெஸ் குழுவினர் இயந்திரங்களை சூறையாடி உடைத்து நொறுக்கினர். இதனால் தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பு இல்லாமல் போயிற்று. ஆனால் அதன்பிறகு, குறைந்த உடல் உழைப்புடன் அதிக உற்பத்தி திறன் கொண்ட இயந்திரங்கள் உருவாகி வந்தன. இது தொழிலாளர்களுக்கும் அனுகூலமாகவே இருந்தது.

இந்த மாற்றங்களை இன்றைய காலத்துடன் பொருத்திப் பார்ப்பதில் சிரமங்கள் உள்ளன. நவீன காலத்தில் உருவாகும் வேலைவாய்ப்புகள் திடீரென உருவாகின்றன. அதேவேகத்தில் நீர்க்குமிழிகளாக மறைந்தும் போகின்றன. ஆனாலும் எனக்கு தொழிலாளர்கள் மீது நம்பிக்கை இருக்கிறது. மாறிவரும் வேலைவாய்ப்பு உலகிற்கு ஏற்றபடி அவர்கள் தம் மென்திறன்களை வளர்த்துக்கொள்வார்கள். இல்லையெனில் மாறிக்கொண்டே இருக்கும் சூழலுக்கு தாக்குப்பிடிக்க முடியாது. அடுத்த பணியில் சமூக பாதுகாப்பை ஏற்படுத்திக்கொள்வது. பணியை பகுதிநேரமாக அல்லது ஒப்பந்த முறையில் செய்வது போன்ற நிலைகளை தேர்ந்தெடுப்பது. இதில் தொழிலாளர்கள் கவனமாக இருக்க வேண்டும்.

## வேலையில் சமூக பாதுகாப்பு என்பதை விவரியுங்களேன்.

வேலையில் சமூக பாதுகாப்பு என்பது, வரி மூலம் பிடித்தம் செய்யப்பட்டு காப்பீடு செய்யப்படும் நிதிதான். இதன்மூலம் பல்வேறு குடும்ப சூழல்களுக்கும், வயதாகும்போதும் கிடைக்கும் வேலை சார்ந்த காப்பீட்டுத்தொகை உங்களுக்கு நிம்மதியைத் தரும். பாதுகாப்பு உணர்வை ஏற்படுத்தும். இந்தியாவில் தற்போது இம்முறை இல்லை என்றாலும், விரைவில் அமலுக்கு வர வாய்ப்புள்ளது. காரணம் இன்று ஸ்மார்ட்போன் மூலம் பணப்பரிமாற்றத்தை வெளிப்படையான முறையில் செய்யத்

தொடங்கிவிட்டோம். அமைப்பு சாராத முறைப்படுத்தாத தொழில்துறையைக் கொண்டுள்ள இந்தியாவுக்கு இம்முறை பயன் கொடுக்கும்.

**இதில் தனியார் துறையின் பங்களிப்பும் தேவை உண்டா?**

நிச்சயமாக. வேலையில் சமூக பாதுகாப்பு என்பதை அரசு வேலைகள் மட்டுமே ஏற்படுத்திவிட முடியாது. தனியார் துறையினரின் பங்களிப்பு இதனை முழுமையாக்கும். இதில் நடக்கும் பணப்பரிமாற்றங்கள் பொருளாதார மாற்றங்களை ஏற்படுத்தும். கென்யாவில் நடைபெறும் சம்பள பரிமாற்றங்கள் 90 சதவீதம் ஸ்மார்ட்போன்கள் மூலமே நடைபெறுகிறது. ஏறத்தாழ அந்நாட்டு பொருளாதாரத்தில் இது 10 சதவீதம் என்றால் ஆச்சரியமாக இருக்கிறதா?

இதனை அரசு மட்டுமே கண்காணிக்கும் என்று கூறமுடியாது. தன்னார்வ தொண்டு நிறுவனங்கள், சமூக மேம்பாட்டு நிறுவனங்கள் இதன் வெளிப்படைத்தன்மையை கண்காணித்து வருகின்றன.

**நன்றி - டைம்ஸ் ஜன.1, 2020 ஆங்கிலத்தில் - சுரோஜித் குப்தா**

**2**

# ”சகோதரத்துவத்தை வலியுறுத்திய கவிஞர் அவர்”

கவிஞர் ஃபைஸ் அகமது ஃபைஸ் 1979ஆம் ஆண்டு கவிதை ஒன்றை எழுதினார். அதன் பெயர் ஹம் தேக்கேங்கே. இக்கவிதை இன்று சர்ச்சையாகி வருகிறது. இதுபற்றி அவரது பேரன் உளவியல் மருத்துவர் **அலிமாதி ஹஸ்மியிடம்** பேசினோம்.

**உங்கள் தாத்தா இறந்து 35 ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் இன்றும் அவரின் கவிதை இக்காலகட்டத்திற்கும் பொருந்தும்படி இருப்பதைப் பற்றி சொல்லுங்கள்.**

என் தாத்தா கிண்டலாக சொல்லுவார். பாகிஸ்தானின் நிலைமை மாறப்போவதில்லை. அதேபோல, என் கவிதைக்கும் வயது ஏறப்போவதில்லை. தாத்தாவின் கவிதை மீது சர்ச்சை ஏற்படுத்திய கான்பூர் ஐஐடி பேராசிரியரும், இந்திய பிரதமருமான மோடிஜியும் கவிதையை தீர்க்கமாக தங்கள் செயலின் மூலம் ஆமோதிக்கிறார்கள்.

**உங்கள் தாத்தா எழுதிய கவிதையை தேசவிரோதம் என்று குற்றம் சாட்டி கான்பூர் இதற்கென தனி குழுவை அமைத்துள்ளதே?**

ஆம் என் தாத்தா தேசியவாதி கிடையாது. அவர் உலகவாதி. ஆசிய துணைக்கண்ட நாடுகளில் உள்ள அனைவரையும் தன் சகோதரர்களாகவே அவர் நினைத்தார். தன் படைப்புகளையும் அப்படியே எழுதினார். இன்று அது சட்டவிரோதம். தேசத்திற்கு எதிரானது என்று அரசால் கூறப்பட்டுள்ளது. இதில் ஆச்சரியம் ஏதுமில்லை. தன்னுடைய நாட்டு மக்களின் பிரச்னைகள் என்று பார்க்காமல் உலக மக்களின் பிரச்னைகளையும் தன்னுடையதாகவே அவர் பார்த்தார். ஐஐடி கான்பூர் கவிதையின் ஜனநாயகப்பூர்வத் தன்மையைக் கவனிக்கவே இல்லை. இன்று இந்தியாவில் குடியுரிமை சட்டத்திற்கு எதிராக நடக்கும் ஜாமியா, ஜேஎன்யூ போராட்டம் போலவே நாங்களும் இந்த கவிதைக்கு ஆதரவாகப் போராடுவோம்.

**ஏராளமான கட்டுரைகளில் ஃபைஸ் பாகிஸ்தானி கவிஞர் என்று கூறப்படுகிறதே?**

ஃபைஸ் பாகிஸ்தானியர் என்பது தவறான தகவல். அவர் 1911ஆம் ஆண்டு இந்தியாவில்தான் பிறந்தார். பள்ளி, கல்லூரியில் படித்ததும் இங்குதான். பின்னர் தனக்கான வேலையை அமிர்தசரஸில் தேடிக்கொண்டார். 1941ஆம் ஆண்டு அவருக்கு திருமணமானது. அதற்குப் பிறகு, இந்திய ராணுவத்தில் பணியாற்றினார். அவர் பாகிஸ்தானியர் என்று கூறப்படுவது 36 வயதுக்குப்பிறகுதான். இந்தியா, பாகிஸ்தான் என மக்களை அவர் என்றுமே பாகுபடுத்திப் பார்க்கவில்லை. அனைவரும் தன்னுடைய மக்கள் என்றே படைப்பிலும் குறிப்பிட்டார்.

**2016ஆம் ஆண்டு மாமி விழாவில் ஃபைஸ் எழுதிய படம் திரையிட மறுக்கப்பட்டது, அவரின் மனைவி டில்லிக்கு வரவிருந்த விழாவுக்கு இந்திய அரசு அனுமதி மறுத்துவிட்டது. இவை பற்றி சொல்லுங்கள்.**

காரணம், ஃபைஸின் கவிதைகள். அவை சர்வாதிகாரத்தை, அரசை , மனிதநேய மறுப்பாளர்களை கேள்வி கேட்கிறது. சமத்துவத்திற்காகவும், நீதிக்காகவும் போராடுபவர்களுக்கு என்றுமே துணை நிற்பது ஃபைஸின் கவிதைகள். இதை தாங்க முடியாமல்தான் இத்தகையை செயல்களில் அரசு ஈடுபடுகிறது.

**நன்றி- டைம்ஸ், ஜன.5, 2020**

**ஆங்கிலத்தில் - சோனம் ஜோஷி**

**3**

# முப்படைக்கும் ஒரு தளபதி என்ற முறையை வரவேற்கலாம்

**அனித் முகர்ஜி, நான்யாங் தொழில்நுட்ப பல்கலைக்கழக உதவி பேராசிரியர்.**

இந்தியாவில் உள்ள முப்படைகளுக்கும் தனித்தனி தளபதிகள் உண்டு. தற்போது மத்திய அரசு இம்மூன்று படைகளுக்கும் சரியான ஒருங்கிணைப்பு

இல்லை என்று கூறி, ஒரு தலைவரின் கட்டுப்பாட்டில் படைகளை வைத்திருக்கவேண்டும் என்று கூறியது. இதற்காக பிபின் ராவத்தை முப்படைகளின் தளபதியாக அரசு நியமித்துள்ளது. இதன் சாதக பாதகங்களை அனித் முகர்ஜி விவரிக்கிறார்.

### சிடிஎஸ் முறையில் மேம்பாடாக என்ன அம்சங்களைக் கூறுவீர்கள்.

இம்முறையில் ராணுவ விவகாரங்கள் துறை தொடங்கப்பட்டுள்ளது. இத்துறை இயக்குநர் அனைத்து படைகளின் தகவல்களை இணைத்து ஒருங்கிணைப்பவராக இருப்பார். டிஎம்ஏ என்கிற இத்துறையின் செயல்பாடுகளை ஆறு மாதங்களுக்குள் கண்டறிந்துவிடலாம். இது ராணுவச் சீர்திருத்தங்களின் தொடக்கம்தான். ஓராண்டுக்குள் இந்த அமைப்பின் செயல்பாடுகளை எளிதாக கணித்துவிடலாம்.

### ராணுவத்துறையில் என்ன பிரச்னைகள்?

இங்கு பல்வேறு பிரிவுகள் உள்ளன. அவற்றைக் கண்காணிப்பது கடினமாக உள்ளது. இதற்கு வெவ்வேறு தலைவர்கள் என்பதால் தகவல்தொடர்பு கடினமாகிவிட்டது. ராணுவக்கல்வி, மக்களுடன் இணைந்திருப்பது, ஆயுத உதவி, பதவி உயர்வு ஆகியவை ராணுவத்தின் முக்கிய அம்சங்கள் ஆகும். பிற வளர்ந்த நாடுகளின் ராணுவத்தை விட மக்களுடன் நெருக்கமாக இந்திய ராணுவம் உள்ளது.

**நன்றி: டைம்ஸ்**
**ஆங்கிலத்தில் - நளின் மேத்தா**

# 4
# ”பாக். மனித உரிமைகளை என்றுமே மதித்ததில்லை”

### ஆரிஃப் ஆஜாகியா, மனித உரிமைகள் செயற்பாட்டாளர்.

பாகிஸ்தானின் சட்டங்கள் மற்றும் ராணுவத்தை கடுமையாக விமர்சித்து வந்தவர் ஆரிஃப். தற்போது வெளிநாட்டில் வசிப்பவர், தாய்நாட்டில் நடைபெறும் மனித உரிமை மீறல்களைக் கண்டித்துப் பேசி வருகிறார்.

**பாகிஸ்தானில் நடைபெறும் பல்வேறு விஷயங்களைப் பற்றி பேசி வருகிறீர்கள். அங்கு நடைபெறும் முக்கியமான பிரச்னையாக எதனைக் கூறுவீர்கள்?**

அங்கு நடைபெறும் மனித உரிமை மீறல்கள் பற்றிய புகார்கள், செய்திகள் நம்பிக்கை அளிக்கும்படி இல்லை. ராணுவத்தின் சொல்படி நடப்பவர்தான் அங்கு பிரதமராக முடியும். பாக். ராணுவத்தினர் சிந்து, பலுசிஸ்தான், கைபர் பக்துன்காவா ஆகிய பகுதிகளில் கடுமையான மனித உரிமை மீறல்களை நிகழ்த்தியுள்ளனர். அங்கு சுதந்திரமாக பேசுவது கூட குற்றமாக கருதப்படுகிறது. குழந்தை தொழிலாளர்கள், கொத்தடிமை முறை, பாலியல் தொழில், குழந்தைகளின் மீதான வன்முறை ஆகியவை பாக்.கில் சாதாரணமாக நடைபெற்று வருகிறது. மசூதிகளிலும் மதராசாக்களிலும் இதுபோன்ற அநிதீகள் நடந்தாலும், அவை இன்னும் கண்டுகொள்ளப்படவிலைல.

**பாக்கில் சிறுபான்மையினர் மீது மனித உரிமை மீறல்கள் நடைபெறுகின்றன என்பதை நம்புகிறீர்களா?**

பாகிஸ்தான் தீவிரவாதிகளுக்கு உதவி செய்து வருவதை அனைத்து உலக நாடுகளும் அறிவார்கள். பாகிஸ்தான் தனது நாட்டு தீவிரவாதத்தின் மூலம் பிற நாடுகளை மிரட்டி நிதி பெற்று வருகிறது. இந்தியா மற்றும் ஆப்கானிஸ்தான் ஆகிய நாடுகளுக்கு எதிரான தீவிரவாத செயல்களை அதி விருப்பத்துடன் பாகிஸ்தான் செய்து வருகிறது. முன்நிபந்தனையற்று அமெரிக்கா தரும் நிதியை தீவிரவாத இயக்கங்களுக்கு பாக் அரசு வழங்கி வருகிறது.

**பாக். ஆக்கிரமிப்பு காஷ்மீரில் நிலைமை என்ன?**

அப்பகுதிகளில் பஞ்சாபி பேசும் மக்களே அதிகம் வாழ்கின்றனர். இங்கிருந்து மின்சாரம், தண்ணீர் ஆகியவைஇ பெறப்பட்டு முழு பாகிஸ்தானுக்கும் அனுப்பப்படுகிறது. இதற்கு பாக். ஆக்கிரமிப்பு காஷ்மீருக்கு எந்த பலனும் கிடைப்பதில்லை. இங்கு சீன முதலீடு தற்போது குவிந்து வருகிறது.

**பாகிஸ்தான் அமைச்சர்கள் இந்தியாவுக்கு எதிராக பேசிவருவது பற்றி?**

பாகிஸ்தான் இந்தியாவின் உள்நாட்டு விவகாரங்களான காஷ்மீர் மற்றும் சிறுபான்மையினர் பற்றி பேசுவதை உலக நாடுகள் கண்டுகொள்வதில்லை. காரணம், பாகிஸ்தானில் மனித உரிமை மீறல்கள் ஏராளம் நடைபெறுகின்றன. அங்குள்ள சிறுபான்மையினரை மிகவும் மோசமான விதத்தில் நடத்துவது அவர்களின் வழக்கம். பிற மத பெண்களை மதம் மாற்றுவது அண்மையில் அவர்கள் செய்து வரும் அநீதியான நடவடிக்கை. இந்தியாவில் முஸ்லீம் ஒருவர் எந்த இடத்திலும் உரிமையுடன் இறைவனைத் தொழ முடியும். சுதந்திரமாக இதனைச் செய்யலாம். ஆனால் பாக்கில். மசூதி தவிர்த்து வேறு எங்கும் தொழக்கூடாது என்று உத்தரவே உண்டு.

## பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் அமைதி நிலவ என்ன செய்யலாம்?

பாக். இந்தியா மற்றும் ஆப்கானிஸ்தானுடன் நேரடி மற்றும் மறைமுகப் போர் ஆகியவற்றில் ஈடுபடுவதைக் கைவிடவேண்டும். பாகிஸ்தானின் பொருளாதார நிலைமைக்கு ராணுவம் இவ்வளவு பெரிதாக இருக்கவேண்டியது அல்லை.

**நன்றி - டைம்ஸ் 24, 2020**
**ஆங்கிலத்தில்: அமின் அலி**

**5**

# ”நாம் நினைத்ததைவிட நிலைமை மோசமாக உள்ளது”

**டேவிட் வாலஸ் வெல்ஸ், நியூயார்க் மேகசின் கூடுதல் ஆசிரியர்.**

வெப்பமயமாதல் பற்றி தி அன்ஹேபிட்டபிள் எர்த் என்ற நூலை எழுதியுள்ளார். ஜெய்ப்பூர் இலக்கியத் திருவிழாவுக்கு வந்தவரிடம் பேசினோம்.

**நீங்கள் உங்கள் நூலின் தொடக்கத்திலேயே இப்போது உள்ளதை விட நிலைமை மோசமாகும் என்று கூறியுள்ளீரகளே?**

நாம் என்ன செய்துள்ளோம் என்று கூட தெரியாதபடி வெப்பமயமாதலுக்கான விஷயங்களை செய்து விட்டோம். இப்போது 2 டிகிரி செல்சியஸ் வெப்பநிலை அதிகரித்தால் கூட புயல்கள், கடலின் நீர்மட்டம் உயர்வது உள்ளிட்ட பாதிப்புகள் ஏற்படும். கொல்கத்தா போன்ற நகரங்களில் வெப்பம் மேலும் அதிகரிக்கும். வெப்பத்தின் பாதிப்பால் பலரும் சுருண்டு விழுவார்கள். வெப்பமயமாதலால், 200 மில்லியனுக்கும் அதிகமான மக்கள் சூழல் அகதியாக இடம்பெயர்வார்கள். 150 மில்லியனுக்கும் மேற்பட்ட மக்கள் காற்று மாசுபாட்டால் இறப்பார்கள். இதுமட்டுமன்றி, ஆர்க்டிக் பகுதியிலுள்ள பனிக்கட்டிகள் கரையும்.

இதனை நாம் எப்படி சமாளிக்கப்போகிறோம் என்பதை திட்டமிடுவது அவசியம். இதில் நிலப்பரப்பு ரீதியான அரசியல், கலாசாரம் ஆகிய பிரச்னைகளும் உண்டு.

**நீங்கள் கூறும் வாதங்களை வளர்ந்த நாடுகள் எதுவும் கேட்பதாக தெரியவில்லையே?**

அமெரிக்கா போன்ற நாடுகள் அகதிகளால் வளர்ந்து பொருளாதாரத்தை தீர்மானிக்கும் சக்தியாக மாறியுள்ளன. ஆனால் இன்று அவர்களை நிர்க்கதியாக விட்டுவிட்டு தன் எல்லைகளை மூட முயல்கிறது. இது தவறான செயல். காரணம், உலகளவில் கார்பனை அதிகளவு வெளியிடுவது அமெரிக்காதான். அகதிகளுக்கு மட்டுமல்ல சூழலுக்கும் அநீதி இழைப்பது அமெரிக்காதான்.

**வெப்பமயமாதலின் சில அம்சங்களைச்ச சொல்லுங்கள்.**

நாம் நினைப்பதை விட வேகமாக வெப்பமயமாதல் உலகை பாதித்து வருகிறது. காற்று மாசுபாட்டால் ஆண்டுக்கு 90 லட்சம் பேர் இறந்து வருகின்றனர். இறப்பு தவிர மூச்சுக்கோளாறு, ஆஸ்துமா ஆகிய

பக்கவிளைவுகள் ஏற்படுகின்றன. வெப்பமயமாதலில் நாம் மக்களுக்கு ஏற்படும் பாதிப்புகளைப் பற்றி பெரியளவு கவனம் கொள்வதில்லை. இதைப் பற்றி பேசும் அளவுக்கு உலக நாடுகள் இன்னும் முன்வரவில்லை.

**கிரேட்டா தன்பெர்க் போன்ற சூழல் போராட்டக்காரர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

கிரேட்டாவின் தன்னெழுச்சியான போராட்டம் பல்வேறு இடங்களில் நல்ல விளைவை ஏற்படுத்தியுள்ளது. ஆனால் இப்போராட்டங்களை உலக வணிக அமைப்பு ஏற்கவில்லை. இப்போராட்டங்களை உலகளவில் தொடர்ச்சியாக நடத்தினால் மட்டுமே மாற்றங்களை நாம் காண முடியும். இப்போராட்டத்தில் கிரேட்டாவுக்கு அவநம்பிக்கையும் விரக்தியும் கூட ஏற்படலாம். ஆனால் இதன் விளைவுகள் மக்களிடம் சென்று சேரும் என்பதுதான் என்னுடைய நம்பிக்கை. இதில் கருத்து கூறவேண்டியது அவர்கள்தான்.

**குறைவாக விமானப் பயணங்களை செய்வது, வீகன் உணவுகளை சாப்பிடுவது என கார்பன் வெளியீட்டைக் குறைக்க பலர் முயல்கின்றனர். இதுபற்றி உங்கள் கருத்து?**

தனிப்பட்ட அளவில் சூழல் மாற்றங்களுக்கு எதிராக நாம் மேற்கொள்ளும் இத்தகைய மாற்றங்களை நான் ஆதரிக்கிறேன். காரணம், இவற்றின் மூலம் நாம் அரசியல்வாதிகளிடையே குறிப்பிட்ட கவனத்தை ஏற்படுத்த முடியும். அதேசமயம் உணவில் இறைச்சியை தவிர்ப்பது சூழலில் என்ன மாதிரியான மாற்றங்களை ஏற்படுத்தும் என்று எனக்குத் தெரியவில்லை.

**நன்றி -டைம்ஸ், ஜன.26, 2020**
**ஆங்கிலத்தில்: சோனம் ஜோஷி**

# ”பெரியார் சொன்னதை மக்கள் ஏற்கவில்லை”

ஹரிஹரன் ராஜா சர்மா  என்றால் பலருக்கும் புரியாது. **ஹெச்.ராஜா** என்றால் அனைவரும் புன்னகை பூப்பார்கள். அந்தளவு பா.ஜ.கவின் புகழை தமிழகத்தில் பரப்ப பாடுபட்டு வருபவர் இவர். பெரியாரை அவதூறு செய்வது, உயர்நீதிமன்றத்தை ஏக வசனத்தில் திட்டுவது என எப்போதும் சர்சையின் மையத்தில் இருப்பது இவரது பாணி. அவரிடம் பேசினோம்.

**உள்ளாட்சித் தேர்தலில் பா.ஜ.க சொல்லிக்கொள்ளும்படி வெற்றிபெறவில்லையே. தமிழகத்தில் ஏன் உங்கள் கட்சி இன்னும் தடுமாறி வருகிறது?**

இது கற்பனையான வாதம். நாங்கள் சில இடங்களில் மட்டும்தான் போட்டியிட்டோம். நாடாளுமன்றத் தேர்தலில் நாங்கள் பெற்றுள்ள வாக்குகளைப் பார்த்தாலே தெரியும். நாங்கள் மெல்ல முன்னேறி வருகிறோம்.

**தமிழகத்தில் பா.ஜ.கவிற்கு எதிராக இருக்கும் மனநிலையைப் பற்றி....**

அது உண்மை அல்ல. நாடாளுமன்றத் தேர்தலில் எதிர்க்கட்சிகள் அப்படி ஒரு மனநிலை இருப்பதாக தோற்றத்தை உருவாக்கினார்கள். இது மாறிவிடும் தன்மை கொண்டதுதான்.

**பெரியார் இறந்து நாற்பது ஆண்டுகளுக்கும் பிறகு அவரைச்சுற்றியே அரசியல் அமைந்திருப்பதை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

இது தவறான கருத்து. பெரியார் சொன்னதை அன்றே மக்கள் ஏற்கவில்லை. திராவிடக் கழகத்தினரின் கூட்டத்தில் பேச்சுகளைக் கேட்க சில டஜன் பேர்கள்தான் சேர்கிறார்கள்.  ஆண்டாள் பற்றிய பிரச்னையில் வைரமுத்துவை நான் விமர்சித்தேன். அதற்கு ஆதரவாகத்தானே நிறைய பேர் பேசினார்கள். எனக்கு எதிராக எத்தனை வழக்குகள் போடப்பட்டன? நான் செய்தது தவறு என யாரேனும் கூறினார்களா?

**ரஜினி பெரியார் பற்றி பேசியுள்ளது உங்கள் கருத்து?**

துக்ளக் விழாவில் ரஜினி பேசியது இயல்பான ஒன்று. அந்த விழாவில் சோ பற்றியும், துக்ளக் இதழ் பற்றியும் பேசுவது வழக்கமாக நடப்பதுதான். அவரது பேச்சை திராவிடர் கழக ஆட்கள்தான் சர்ச்சை என்று சொல்லி போராட்டம் நடத்தினார்கள். இல்லையெனில், அவரது பேச்சு கவனிக்கப்படாமலே போயிருக்கும்.

**நன்றி: டைம்ஸ். ஜனவரி 27, 2020**

# ”மக்கள்தான் அவர்களுக்கான அரசியல் சூழ்நிலையை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்”

**மாதவ் கோஸ்லா,** அசோகா பல்கலைக்கழகம் மற்றும் கொலம்பியா சட்டப்பள்ளி ஆகிய அமைப்புகளில் பேராசிரியராக பணிபுரிகிறார்.

**இந்திய அரசியலமைப்பு சிஏஏ போன்ற சட்டங்களை ஏற்பது சரியானதா?**

இல்லை. அது தவறானது. மக்கள், மக்களுக்காக உருவாக்கும் சட்டங்களில் இதுபோன்ற விஷயங்கள் இருக்கக்கூடாது. நான் இவற்றை அரசியலமைப்புச் சட்டத்தில் இணைக்க விரும்பவில்லை.

**லாலா லஜபதி ராய் தன் அரசியல் பயணத்தின் தொடக்கத்தில் இந்துத்தவ பார்வையைக் கொண்டிருந்தாரா?**

லாலா லஜபதி ராய் முக்கியமான அரசியல் ஆளுமை. அவர் வாழும் காலத்தில் மதத்தைப் பின்பற்றினால் அது பெரிய சிக்கலாக மாறும் என்பதை மனப்பூர்வமாக அறிந்திருந்தார். இந்து மதம் மற்றும் இஸ்லாமிய மதம் ஆகியவற்றுக்கு இடையில் எழும் வேறுபாடுகளையும் அவர் அடையாளம் கண்டார். அன்றைய காலத்தில் அம்பேத்கருக்கும், லாலா லஜபதிராய்க்குமான மதரீதியான வேறுபாடுகள் தீவிரமாக இருந்தன.

**இந்து மகாசபையைச் சேர்ந்த சாவர்க்கர், கோல்வால்கர், தீன் தயாள் உபாத்யாய போன்ற தலைவர்கள் அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதில் தாக்கம் செலுத்தினார்களா?**

இந்து மகாசபை இந்திய அரசியலமைப்புச்சட்டம் இந்துக்களுக்கான சுதந்திரத்தை தரவேண்டும் என்று கோரியது. பிற மத மக்களை இரண்டாம்தர குடிமக்களாகவே அந்த அமைப்பு கருதியது. மேற்கத்திய நாடுகளைப் பின்பிற்றி அனைவருக்குமானதாக சட்டங்கள் உருவாக்கப்படுவதை இந்து மகாசபை விரும்பவில்லை. முழுக்க இந்தியமயமாக, இந்து மக்களுக்காக அனுகூலமாகவே சட்டங்கள் இயற்றப்பட விரும்பியது.

**நன்றி: டைம்ஸ் ஜன.29,2020**

**ஆங்கிலம் மூலம்: நளின் மேத்தா**

**8**

# ”சமூக பொருளாதார வளர்ச்சிக்கு மதிய உணவுத்திட்டம் முக்கியமானது”

சென்னையில் காலை உணவுத்திட்டத்தை தமிழக அரசு அக்சயா பாத்ரா அமைப்புடன் இணைந்து தொடங்கியுள்ளது. பெங்களூருவைச் சேர்ந்த இந்த அமைப்பு பல்வேறு மாநிலங்களுடன் இணைந்து பள்ளிக் குழந்தைகளுக்கான மதிய உணவுத்திட்டத்தை செயல்படுத்தி வருகிறது. அமைச்சர் வேலுமணி இத்திட்டம் பற்றி ட்விட்டரில் முன்னமே அறிவித்தாலும் முதல்வர் எடப்பாடி பழனிச்சாமி இதுபற்றி அதிகாரப்பூர்வமான எந்த அறிவிப்பையும் வெளியிடவில்லை.
அக்சய பாத்ரா அமைப்பின் இயக்குநர் ஸ்ரீதர் வெங்கட்டிடம் பேசினோம்.

**தமிழ்நாடு அரசு மதிய உணவுத்திட்டத்தை வெற்றிகரமாக நடைமுறைப்படுத்தி வருகிறது. அதுபற்றிய உங்கள் கருத்து?**

தமிழ்நாடு அரசின் மதிய உணவுத்திட்டம் பல்வேறு மாநிலங்களுக்கும் முன்னோடியான திட்டமாக உள்ளது. இதைப் பின்பற்றி பல்வேறு மாநிலங்களும் மதிய உணவுத் திட்டத்தை அமல்படுத்தி வருகின்றன.

**உங்களது அமைப்பு இந்தியாவில் உள்ள பன்னிரெண்டு மாநிலங்களில் செயல்பட்டு வருகிறது. ஆனால் தமிழகத்தில் உங்களுக்கென சமையல் செய்ய ஒரே ஒரு சமையற்கூடம்தானே உள்ளது?**

நாங்கள் வரும் மார்ச்சிலிருந்து சென்னை கார்ப்பரேஷன் அமைப்புடன் இணைந்து 5, 090 மாணவர்களுக்கு காலை உணவை வழங்க உள்ளோம். இந்த மெனுவில் உப்புமா, இட்லி, பொங்கல், சாம்பார் ஆகியவை உள்ளன. திருவான்மியூரில் உள்ள சமையற்கூடத்தில் சமைக்கப்பட்டு வழங்கப்பட உள்ளது. மொத்த மாணவர்களுக்கான உணவுப்பொருட்களை சமைக்கும் திறன் கொண்டது எங்கள் மத்திய சமையற்கூடம்.

**இதில் நீங்கள் பெற்றுள்ள வெற்றிகளைச் சொல்லுங்கள்.**

சமூகப் பொருளாதார வளர்ச்சியில் பள்ளிக்குழந்தைகளுக்கான உணவுத்திட்டம் முக்கியமானது. நாட்டிலுள்ள 91 மில்லியன் குழந்தைகளுக்கு மதிய உணவுத்திட்டம் சிறப்பான பயன்களை அளித்துள்ளது. இது குழந்தைகள் பள்ளிக்கு வருவது உறுதிப்படுத்தும். இம்மாற்றம், குழந்தைகளின் வழியாக குடும்பம் என பரவி நாட்டை வலுவாக்கும்.

**இப்போது நீங்கள் காலை உணவை அனைத்து மாவட்டங்களிலும் உள்ள அரசு, தனியார் பள்ளிகளிலும் வழங்கினால் எவ்வளவு நிதி தேவைப்படும்?**

ஒரு குழந்தைக்கு 3 ஆயிரம் ரூபாய் தேவைப்படும். இது அக்குழந்தைக்கான ஓராண்டு உணவுச்செலவு.

**நன்றி - டைம்ஸ், ஜன.30, 2020**
**ஆங்கிலத்தில் - விஷ்ணு ஸ்வரூப்**

9

# "மனதைக் கட்டுப்பாடாக வைத்துக்கொள்வதே கடினம்"

### ஈஷா சிங், துப்பாக்கி சுடும் வீராங்கனை

ஈஷா சிங், பதிமூன்று வயதிலேயே தேசிய அளவிலான பத்து மீட்டர் ஏர் பிஸ்டல் பிரவில் பதக்கம் வென்றிருக்கிறார். அவரது வெற்றி, போட்டி தயாரிப்பு, அவர் தவறவிட்ட விஷயங்கள் என பேசினோம்.

**துப்பாக்கி சுடும் வீரராக இல்லாமல் ஈஷா சிங்காக தினசரி நாள் எப்படி தொடங்கும்?**

நான் சிறுவயதிலிருந்து துப்பாக்கி சுடுவதற்கான பயிற்சிகளை எடுத்து வருகிறேன். இதனால் பள்ளிகளில் விளையாட்டு விழா, ஆண்டுவிழா, சுற்றுலா போன்ற விஷயங்களில் பங்கேற்க முடியாது. துப்பாக்கி சுடுதலில் வென்றது சந்தோஷம்தான். ஆனால் என் பள்ளி தோழிகள் பள்ளிவிழாவில் தாம் பங்கு பெற்ற புகைப்படங்களை எனக்கு அனுப்பும்போது கஷ்டமாக இருக்கும். ஏனெனில் நான் அந்த நேரத்தில் போட்டிகளில் பங்கேற்று இருப்பேன். அல்லது பயிற்சிகளில் இருப்பேன்.

போட்டிகளுக்குச் சென்றுவிட்டு பள்ளிக்கு செல்லும்போது அனைவரின் கண்களும் என்னைக் கண்காணித்துக்கொண்டிருக்கும். இது எனக்கு கடுமையான மன அழுத்தத்தை தருகிறது. ஆனால் என்ன, நான் என் வாழ்க்கையை தேர்ந்தெடுத்துவிட்டேன். அதை நோக்கிச் செல்கிறேன்.

**போட்டிக்காக பயிற்சி செய்கிறீர்கள். உங்களை எப்படி மனதளவில் தயாரித்துக்கொள்வீர்கள்?**

விளையாட்டை தொடங்குவதற்கு முன்னதாக எனக்குள்ளாக சிறப்பாக இந்த ஆட்டத்தை விளையாட வேண்டும் என்று சொல்லிக்கொள்வேன். அதை அனுபவித்து செய்வேன். என்னைப் பார்ப்பவர்களையோ, நான் பெறும் புள்ளிகளையோ நான் கண்டுகொள்வதில்லை. அப்போது நான் விளையாடும் விளையாட்டை சிறப்பாக அனுபவித்து விளையாடவே நினைப்பேன்.

போட்டிக்கு முன்னதாக பத்து நிமிடம் தியானம் செய்வேன். உங்கள் மனதில் எழும் அதீத எண்ணங்களையும், சிந்தனைகளையும் கட்டுப்படுத்த இப்பயிற்சி உதவுகிறது.

### என்ன மாதிரியான சிந்தனைகள்?

என்னால் இலக்கை சரியாக சுட முடியுமா? இப்போட்டியில் தோற்றுவிட்டால் என்னாகும்? என்பது போன்ற சிந்தனைகள் மனதில் எழும். அவற்றைக் கட்டுப்படுத்த தியானப் பயிற்சி செய்கிறேன். நான் விளையாடும் போட்டிகளில் செய்யும் தவறுகளை மறக்காமல் குறித்து வைத்துக்கொண்டு, அதனை சரி செய்ய முயன்று வருகிறேன்.

### 2018ஆம் ஆண்டு மானுபாகர், ஹீனா சித்து ஆகியோர் போட்டிகளில் பங்கேற்றீர்கள். இவர்களை உங்களது போட்டியாளர்களாக பார்க்கிறீர்களா?

நீங்கள் கூறும் வீராங்கனைகளான மானு, ஹீனா எனக்கு நண்பர்கள்தான். மானு என்னுடைய அறை தோழியாக இருந்தவர். அவருக்கு வயது 18, ஹீனாவுக்கு வயது 31 ஆகிறது. நாங்கள் ஓய்வு நேரங்களில் பெண்களுக்கான சமாச்சாரங்கள் பற்றி ஜாலியாக அரட்டையடித்துக் கொண்டிருப்பவர்கள். ஹீனா விளையாட்டில் எங்களுக்கு இன்ஸ்பிரேஷனான நபர்.

**நன்றி - டைம்ஸ், பிப்ரவரி 3, 2020**
**ஆங்கிலத்தில் - சித்தார்த் சக்சேனா**

## 10

# ”ஜனநாயக நாட்டிற்கு பொருளாதார பலம் தேவை”

**பேட்ரிக் பாசம், இயக்குநர், ஜனநாயக கழகம்.**

உலகம் முழுக்க பாப்புலிச சிந்தனை கொண்டவர்கள் வென்று அதிபர்களாகவும், பிரதமர்களாகவும் உருவாகி வருகிறார்கள். அப்போது ஜனநாயக சிந்தனை வலுவிழந்து வருகிறதா என்று கேள்வி எழுகிறது அல்லவா? அதற்குத்தான் சரியான பதில்களை அளிக்க ஜனநாயக தன்மையை ஆராய்ந்து வரும் பேட்ரிக் பாசத்தைச் சந்தித்தோம்.

**ஜனநாயகம் இன்று என்ன நிலையில் இருப்பதாக கருதுகிறீர்கள்?**

ஜனநாயகம் இன்று பல்வேறு சவால்களை சந்தித்தாலும் சரியான நிலையில்தான் இருப்பதாக நினைக்கிறேன். ஆனால் புகழ்பெற்ற சிந்தனையாளர்கள் இனி ஜனநாயகத்திற்கு உலகில் இடமில்லை என்று பேசி வருகிறார்கள். அதற்குக் காரணம் அவர்கள் உருவாகி வந்த இடம்தான் என்று நான் அறிவேன்.

மக்கள் இன்று தங்களின் அரசியல் நிலைமை சரியில்லை என்று நினைக்கத் தொடங்கியுள்ளனர். அதனை தங்களது வாக்குகள் மூலம் மாற்ற முயல்கின்றனர். தொண்ணூறுகளில் ஏற்பட்ட உலகமயமாக்க மாற்றங்களால் பணக்காரர்கள் பயன் பெற்றதாக மக்கள் நினைக்கிறார்கள். இதனால்தான் அவர்களுக்கு பாப்புலிச தலைவர்களின் வாக்குறுதிகள் நம்பிக்கை அளிக்கிறது. தங்களின் மதிப்பு மிகுந்த வாக்குகளை அளித்து அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர்.

உதாரணமாக, அமெரிக்க முன்னாள் அதிபரான ஒபாமாவைத் தேர்ந்தெடுத்தவர்கள்தானே 2016இல் டொனால்டு ட்ரம்பைத் தேர்ந்தெடுத்தார்கள். பாப்புலிச தலைவர்களின் செயல்பாடுகளால் உலகளவில் மூடுபனியான சூழலே அரசியலில் நிலவுகிறது. மக்கள் இந்த அமைப்பைத்

தூக்கி எறிய விரும்பவில்லை. அவர்கள் தான் தேர்ந்தெடுத்த அமைப்பு தனக்கு பதில் சொல்லவேண்டும் என எதிர்பார்க்கிறார்கள். எனவே ஜனநாயக அமைப்பு தொன்மையான கிரேக்க ஏதேனிய தன்மையில் இருந்தால் அதனை மக்கள் புறக்கணித்துவிடுவார்கள்.

**அடிப்படையான ஜனநாயக மதிப்புகள் என்று ஏதேனும் இருக்கிறதா? உலகளவில் ஜனநாயகத்தன்மை கடும் சவால்களைச் சந்தித்து வருகிறதே?**

மக்களின் பங்கேற்பு, சமவாய்ப்பிலான வாக்கு, சுதந்திரமான பத்திரிகைகள், பேச்சு மற்றும் எழுத்து உரிமை, வெளிப்படைத்தன்மை ஆகியவைதான் அடிப்படையான ஜனநாயக மதிப்புகள். நாட்டில் தேர்தலில் தோற்றவர்கள் தம் தோல்வியை தாமாகவே ஏற்கும் அளவுக்கு ஜனநாயக, வெளிப்படைத்தன்மையை ஏற்படுத்த வேண்டும். ஆனால் இந்த சூழ்நிலை அனைத்து நாடுகளிலும் இப்போது நிலவவில்லை.

இன்று எந்த விலை கொடுத்தேனும் வெல்லவேண்டும் என்பதில் அனைத்து கட்சியினரும் குறியாக உள்ளனர். இதற்கு சவாலாக இருப்பது இரண்டு விஷயங்கள். ஒன்று, காலனியாதிக்க நிலையில் இருந்த ஆப்பிரிக்க நாடுகளில் ஜனநாயகத் தன்மை குறைவு. அங்கு மனநிலை அப்படி அமைந்துவிட்டது. அடுத்து, ஜனநாயகத்தன்மை பரிணாம வளர்ச்சி பெற்று உருவாக வேண்டும். உலகிலுள்ள நாடுகளில் அனைத்திலும் ஜனநாயகத்தன்மையை ஏற்படுத்த முடியும்.

ஓர் நாடு ஜனநாயகத்தன்மையை ஏற்படுத்த அதற்கு தனித்துச் செயல்படும் சார்பற்ற பொருளாதார பலம்  தேவை. அப்போதுதான் உணவு, வாழிடத்திற்காக மக்கள் மோசமான தலைவர்களுக்கு வாக்கு அளிக்காமல் இருப்பார்கள். இச்சூழலில்தான் ஜனநாயகத்தை வளர்க்க முடியும்.

**பொருளாதார வளர்ச்சி என்ற நிலையில் சீனாவில் என்ன நடந்துகொண்டிருக்கிறது?**

அவர்கள், பொருளாதார அடிப்படை விஷயங்களில் மிகச்சிறப்பாக செயல்பட்டு வெற்றி பெற்றுவிட்டனர். ஆனால் அரசியல் செயல்பாட்டைப் பொறுத்தவரை இரும்புத்திரை நாடாக இருந்தனர். ஆனால் இன்று பாருங்கள். அதன் முக்கிய பொருளாதார வளர்ச்சிப் பகுதியான ஹாங்காங் தன் சுதந்திர முழக்கத்தை முன்னெடுத்துவிட்டது. இருபத்தொன்றாம் நூற்றாண்டில் முக்கியமான பொருளாதார நகரம் ஹாங்காங். அங்கு மக்களிடம் ஜனநாயக

மாற்றத்திற்கான வேட்கை உருவாகிவிட்டது. சீனா, தன் இறுக்கமான சர்வாதிகார அரசியல் கொள்கைகளை வைத்துக்கொண்டு அதிக தூரம் செல்ல முடியாது.

## ஜனநாயகத் தன்மையைக் கொண்டு வருவதற்கு பல்வேறு சக்தி வாய்ந்த அமைப்புகள் தடுக்கின்றனவா?

அமெரிக்காவில் புகையிலை, ஆயுத நிறுவனங்களின் செல்வாக்கு உலகறிந்த ஒன்று. இவர்கள் எப்போதும் தம் வணிகத்திற்கு ஆதரவான பல்வேறு கருத்துகளை சொல்லிக்கொண்டிருப்பார்கள். அதையும் அனுமதிப்பதுதானே ஜனநாயகம். ஆனால் இவர்கள் சொல்லும் விஷயங்களை எல்லாம் அரசு கொள்கைகளாக வகுக்க கூடாது. உன்னை எனக்கு பிடிக்கவில்லை. நீ சொல்வது எதனையும் ஏற்கமாட்டேன் என்ற மூர்க்கத்தனம் நாட்டை ஆபத்தில் தள்ளிவிடும்.

**நன்றி - டைம்ஸ், பிப்ரவரி, 5, 2020**

11

# கற்பனைத்திறன் என்பது மனிதர்களுக்கு மட்டும் சொந்தமானதல்ல!

**மார்க்கஸ் டு சாட்டி, கணித பேராசிரியர், ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகம்**

### செயற்கை நுண்ணறிவு எந்த துறையில் ஆதிக்கம் செலுத்துவதாக உள்ளது?

நாவல்களை எழுதுவது என்பதை செயற்கை நுண்ணறிவு எளிதில் கற்றுக்கொள்ளும் என்று நினைக்கிறேன். ஆனால் எழுத்தை விட காட்சி ஊடகம் சார்ந்து ஏ.ஐ. வெற்றி பெறுவது முக்கியம். நாங்கள் இதற்காக ஏராளமான படங்களை அதற்கு கொடுத்து வருகிறோம். இதில் முக்கியமான காரணியாக விளங்குவது நேரம்தான். நாவலை எழுதுவதில், அதன் கதை, விளக்கம், விவரிப்பு ஆகியவற்றை கற்றுக்கொடுத்து வருகிறோம். இதேபோலத்தான் இசையிலும் அரைமணிநேரத்தில் புதிய இசை வடிவத்தை செயற்கை நுண்ணறிவு உருவாக்கிவிடும். இதில் உள்ள பிரச்னை நாவல், இசை ஆகியவற்றில் உலகளவில் அனைவருக்கும் பொருந்தும்படியான அமைப்பு இல்லை.
இது இலக்கியத்திற்கான சிக்கல்தான். ஆனால் காட்சி ஊடகத்திற்கு இதுபோன்ற சிக்கல்கள் இல்லை.

### செயற்கை நுண்ணறிவு மற்றும் தகவல் பாதுகாப்பு பற்றி என்ன கருத்தைக் கொண்டிருக்கிறீர்கள்?

இன்று மக்கள் இலவசமாக தொலைத்தொடர்பு நிறுவனங்கள் வழங்கும் டேட்டாவை பயன்படுத்திவிட்டு மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். இதற்கு விலையாக தங்களது இடம், தங்களது முக்கியமான தகவல்களை

விலையாக கொடுப்பது பற்றிய விழிப்புணர்வை அவர்கள் கொண்டிருக்கவில்லை.

இந்த விஷயங்களில் இணையசேவை அளிக்கும் நிறுவனங்கள், வெளிப்படையாக நடந்துகொள்ள வேண்டும். அவர்கள் பயனர்களின் தகவல்களை பிறருக்கு அளித்தால் அதற்கான தொகையை பயனர்களாகிய மக்களுக்கு அளிக்க முன்வரவேண்டும். மக்கள் தங்களது தகவல்களுக்கே உரிமையாளர்களாக இல்லாத சூழல் ஆபத்தானது. இதைச் சாதிக்க அவர்கள் ஒன்றுபடுவது முக்கியம்.

**செயற்கை நுண்ணறிவு மூலம் நாவல் எழுதலாம், இசைக்குறிப்புகள் உருவாக்கலாம் என்கிறீர்கள். அப்படியென்றால் தற்போது உள்ள நாவலாசிரியர்கள், இசையமைப்பாளர்கள் பணிக்கு பிரச்னை ஆகாதா?**

இசையமைப்பாளர்கள், நாவலாசிரியர்கள் இதுபற்றி கவலைப்பட ஏதுமில்லை. ஏனெனில் மனிதர்கள் யோசித்து உருவாக்கும் இசைக்குறிப்புகளுக்கும், செயற்கை நுண்ணறிவின் திறனுக்கும் நிறைய இடைவெளி இருக்கிறது. மனிதர்கள் இன்று தாங்கள் வெளிப்படுத்தும் கதை, இசை வடிவத்தை தங்களின் உள்ளிருந்து வந்த அற்புதமான படைப்பாக பார்க்கிறார்கள். இதே தன்மையை செயற்கை நுண்ணறிவு உருவாக்கும்போது நீங்கள் மேற்சொன்னவர்களுக்கு அபாயம் உருவாக வாய்ப்புள்ளது.

**நன்றி: டைம்ஸ், மார்ச் 2020**

## 12

## ”ஹாலிவுட்டின் நேர மேலாண்மையை நாம் கற்கவேண்டும்”

நிம்ரத் கவுர்

மாடலாக விளம்பரங்களில் வந்து மனம் கவர்ந்தவர். இவரின் சினிமா பயணம் 2012ஆம் ஆண்டு இயக்குநர் அனுராக் காஷ்யப்பின் பெடலர்ஸ் என்ற திரைப்படம் மூலம் தொடங்கியது. தற்போது அமெரிக்க திரில்லர் தொடரான ஹோம்லேண்ட்டில் நடித்து வருகிறார். லன்ச் பாக்ஸ், ஏர் லிஃப்ட்ஆகிய இந்தி படங்களில் நடித்து பார்வையாளர்களை ஈர்த்த நிம்ரத்திற்கு வயது 37.

**ஹோம்லேண்ட் தொடரில் நடிப்பது எப்படியிருக்கிறது?**

அமேசிங். லாஸ் ஏஞ்சல்சில் இத்தொடரின் குழுவினரைச் சந்தித்தேன். அப்போது தன்சிம் குரேசி என்ற கதாபாத்திரத்தை எழுதியிருந்தனர். நீங்கள் இதில் நடிக்க விரும்புகிறோம் என்று கேட்டனர். நான் மறுப்பேனா, உடனே ஒப்புக்கொண்டேன். நான் இந்தியில் சில படங்களை இடைவெளி விட்டு செய்திருக்கிறேன். இத்தொடரை நான் முன்பிருந்தே பார்த்து வந்திருக்கிறேன். இதன் இறுதிப்பகுதியில் நடிப்பது எனக்கு பெருமையாக இருக்கிறது.

**இத்தொடர் இல்லாமல் வேவார்ட் பைன்ஸ் என்ற தொடரிலும் கூட நடித்திருக்கிறீர்கள். இதன்மூலம் உலகளவிலான பார்வையாளர்களை பெற முடியும் என நம்புகிறீர்களா?**

ஆங்கில வழியில் படித்ததால் என்னால் ஆங்கிலத்தில் இந்த இரு தொடர்களிலும் புரிந்துகொண்டு பாத்திரங்களை நடிக்க முடிந்தது. நான் இங்கு கூறுவது உங்கள் தகவல் தொடர்புத்திறன் பற்றி. இதைப்போலவே உங்களுடைய உச்சரிப்பை மாற்றி நடிக்கவேண்டும் என ஒருவர் கூறினால்

அதனை நான் சந்தோஷமாக ஏற்பேன். இதுபோன்ற சவால்கள்தான் மிகச்சிறந்த நடிகர்களை உருவாக்குகிறது என நம்புகிறேன்.

**மேற்குலகில் நடைபெற்ற படப்பிடிப்பில் நீங்கள் கற்றுக்கொண்ட விஷயங்கள் என்ன?**

நேரத்தை மதித்து சரியாக நடந்துகொள்வதுதான். அங்கு அனைத்துமே கறாராக திட்டமிட்டபடி நடக்கிறது. இந்தியர்களின் தன்மை உணர்ச்சிவசப்படுவதாக உள்ளது. அங்கு படப்பிடிப்பில் உள்ள அனைவருக்குமே தாங்கள் செய்யும் வேலை என்ன என்று தெளிவாகத் தெரியும். நம்மிடம் என்ன எதிர்பார்க்கிறார்கள் என்பதையும் அவர்கள் தெளிவாக கூறிவிடுகிறார்கள்.

**நீங்கள் தேர்ந்தெடுக்கும் கதாபாத்திரங்கள் மிகவும் தெளிவான, அதேசமயம் உறுதியானவையாகவே உள்ளன. லன்ச்பாக்ஸ் தொடங்கி வெப் சீரிஸ் வரையிலும் கூறுகிறேன். இந்த தேர்வு எப்படி அமைந்தது?**

இந்த கதாபாத்திரங்கள் எனக்கு கிடைத்தது என் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்லுவேன். எழுத்தாளர்கள் என்ன நினைத்து எழுதினார்களோ அந்த சூழலில் அக்கதாபாத்திரமாக என்னை மாற்றிக்கொள்ள முயல்கிறேன். மேலும் படப்பிடிப்பு நடக்கும் இடங்களிலும் சில தகவல்கள் கதாபாத்திரங்கள் சார்ந்து கிடைக்கும் அவற்றையும் நான் உள்வாங்கிக்கொண்டு நடிக்கிறேன்.

**திரைப்படங்களில் நடித்துவிட்டு திடீரென டிவிக்கு சென்றீர்கள். பின் இணையத் தொடரில் நடிக்கிறீர்கள். இவற்றில் எது உங்களுக்கு பொருத்தமான ஊடகமாக நினைக்கிறீர்கள்?**

அப்படி எதுவும் இல்லை. நான் ஹோம்லேண்ட் தொடரில் நடித்துவிட்டு லன்ச் பாக்ஸ் படத்தில் நடித்திருந்தால் நிச்சயம் வருத்தப்பட்டிருப்பேன். நான் என் கதாபாத்திரம் எப்படி எழுதப்பட்டிருக்கிறது என்று மட்டுமே பார்க்கிறேன். அதைக்கொண்டே அதில் நடிப்பதைப் பற்றி முடிவு செய்கிறேன். தி டெஸ்ட் கேஸ் என்ற இணையத்தொடரில் நடிக்கத் தொடங்கும்போது இணையத் தொடர் என்பது இங்கு பிரபலமான ஒன்றாக இல்லை. ரிஸ்க்தான். ஆனால் நான் துணிந்து நடித்தேன். என்னுடைய கதாபாத்திரங்களை பின்னாளில் மக்கள் நினைவுகூரவேண்டும் என்பதே என்னுடைய ஆசை.

**நாடகத்தில் நடித்துவிட்டு அதன் பின்னணியில் திரைப்படத்திற்கு வந்தவர் நீங்கள். சினிமாவில் நடிப்பதற்கு நாடக அனுபவம் உதவியதா?**

நிச்சயமாக. எனது குடும்பம் ராணுவப் பின்புலம் சார்ந்தது. சினிமாவில் காட்சி, எப்படி எடுக்கிறார்கள் என்பதை நான் மெல்லத்தான்

புரிந்துகொண்டேன். நடிப்பு என்பதை நான் உறுதியான என் எதிர்காலமாக நம்பினேன். அதனால்தான் பட்டப்படிப்பு முடிந்ததும் மும்பைக்கு வந்தேன். அப்போதும் வாய்ப்புகள் தேடிக்கொண்டிருக்கும்போது ஆறுமாதங்கள் வேறு வேலைகளையும் செய்து பணம் சம்பாதித்து என்னைக் காப்பாற்றிக்கொண்டேன். இல்லையெனில் இங்கு இந்த இடத்திற்கு வந்திருக்க முடியாது.

நன்றி – இந்தியன் எக்ஸ்பிரஸ் – ஏ.ஹரிணி பிரசாத்

# "மரங்களை அழித்தால் நோய் பரவும்"

**சோனியா ஷா, எழுத்தாளர்.**

**நீங்கள் 2016ஆம் ஆண்டு எழுதிய பான்டெமிக் என்ற நூலில் கொரோனா தாக்குதல் நடைபெற வாய்ப்புள்ளது என்று முன்னரே கணித்து எழுதியுள்ளீர்கள். எப்படி?**

2010ஆம் ஆண்டு ஹைதியில் காலரா பாதிப்பு ஏற்பட்டது. பொதுவாக நாம் காலராவை ஏழைகளுக்கு வரும் நோய் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் காலரா பாதிப்பு நியூயார்க், லண்டன், பாரிஸ் ஆகிய பகுதிகளை பாதித்தது. இதனை நீங்கள் எப்படி புரிந்துகொள்வீர்கள். நான் சீனாவில் இன்று நோய் பாதித்துள்ள பகுதிகளை முன்னரே சென்ற பார்வையிட்டுள்ளேன். வைரஸ் தாக்குதல்கள் பலமுறை ஒருவரைத் தாக்கும் என்பதை நோய்களின் வரலாறு பற்றி படித்தாலே அறிய முடியும்.

**நீங்கள் கடந்த ஐம்பது ஆண்டுகளில் 300 வைரஸ் கிருமிகள் உருவாகியுள்ளதாக கூறுகிறீர்களே? அது எப்படி?**

நான் கூறியது உண்மைதான். ஏறத்தாழ உலகில் பரவிய நோய்களில் 60 சதவீதம் விலங்குகள் மூலம் பரவியதுதான். மிருகங்கள் இன்று வெப்பமயமாதல் மூலம் மனிதர்களின் வாழிடங்களுக்கு நெருக்கமாக வாழ்ந்து வருகின்றன. இதன் விளைவாக எளிதில் மனிதர்கள் நோய்வாய்ப்படுகின்றனர். அரசுகள் நாட்டு வளர்ச்சிக்காக காடுகளை அழித்து, மரங்களை வெட்டி கட்டடங்களை உருவாக்குகின்றனர். அங்கு வாழும் வௌவால் போன்ற பறவைகள் மனிதர்கள் வாழும் இடங்களிலுள்ள விவசாய பண்ணைகள் உள்ளிட்ட இடங்களுக்கு இடம்பெயர்கின்றன. இதன் விளைவாக, அவற்றின் உடலிலுள்ள கிருமிகள் எளிதாக மனிதர்களைத் தொற்றுகின்றன. நாம் நம்முடைய மக்கள்தொகை பெருக்கத்தை குறைத்துகொள்வது அவசியம்.

**சீனாவில் தொடங்கிய கொரோனா வைரஸ், இப்போது இந்தியாவிலும் பரவத்தொடங்கியுள்ளது. நாம் எப்படி இதை எதிர்கொள்வது?**

நிச்சயமாக சந்தேகமில்லாமல் இந்தியாவில் நிறைய பேர் பாதிக்கப்பட வாய்ப்புள்ளது. இந்தியாவில் அதிக மக்கள்தொகை என்பதால் வைரஸ் வேகமாக பரவ வாய்ப்புள்ளது. இங்கு இளைஞர்கள் அதிக எண்ணிக்கையில் இருப்பதால், அவர்களை வைரஸ் தாக்கும் வாய்ப்பு குறைவு. ஒப்பீட்டளவில் உலகில் வயதானவர்களை அதிகமாக தாக்கி பலி கொண்டுள்ளது. இதனை அரசு சரியான முடிவு எடுத்து முன்னதாகவே கட்டுப்படுத்துவது அவசியம்.

**இந்தியாவில் வெயில் அடிப்பதால் நோயின் தாக்கம்  குறையும் என்கிறார்களே?**

வெப்பச்சூழல் என்பது நுண்ணுயிரிகளின் பெருக்கத்தைக் குறைக்கும். ஆனால் பருவக்காலம் மாறும்போது இன்ப்ளுயன்சா வைரஸ் போல தன்னை மேம்படுத்திக்கொண்டு தாக்கும் வாய்ப்பும் உண்டு. ஓராண்டில் தடுப்பூசியை உருவாக்கினால் மட்டுமே நோய்களைக் கட்டுப்படுத்த முடியும்.

**நாம் உலகமயமாக்கல் காலத்தில் வாழ்கிறோம். வைரஸ் பிரச்னையை எப்படி சமாளிக்க முடியும்?**

நீங்கள் கூறும் பிரச்னை இருக்கிறதுதான். மக்கள்தொகை அதிகம் இருக்கும் இடங்களில் நுண்ணுயிரிகளின் பரவல் வேகமாக இருக்கும். இதன்விளைவாக, நோய் பரவிய நகரங்களுக்கும் பரவாத நகரங்களுக்கும் தாக்குதல் தொடங்கும். இதன்விளைவாக நாம் வேகமாக பல்வேறு ஆய்வாளர்களை அனுப்பி பாதிப்பை குறைக்க முயற்சிக்கவேண்டும். இந்த விஷயங்களை செய்ய சுற்றுலாவுக்கு தடை விதித்து நாட்டின் எல்லைகளை மூடி சுகாதார விஷயங்களை வலுவாக்க வேண்டும். நமக்கு வேறு வழியில்லை.

**நன்றி - டைம்ஸ், மார்ச் 8, 2020**

**ஆங்கிலத்தில்: சோபிதா தர்**

## ”வாசித்தால்தான் சுயமாக ஒரு பத்தியேனும் எழுத முடியும்”

**எழுத்தாளர் மனோரஞ்சன் பியாபாரி,** மேற்கு வங்காளத்தைச் சேர்ந்த எழுத்தாளர். மலையாள எழுத்தாளர் பஷீர் போலவே ஏராளமான பணிகளைச் செய்து, எழுதியும் வந்தவர். இன்னும் நான் என்னுடைய சிறந்த கதையை எழுதவில்லை என்று கூறும் துணிச்சல் கொண்ட சுய விமர்சனவாதி. அவரிடம் பேசினோம்.

**உழைக்கும் தொழிலாளர்களுக்கு நீங்கள் கதாநாயகனாக இருக்கிறீர்கள். வாழ்க்கையை நடத்திச் செல்வதற்காக ஏராளமான வேலைகளை பார்த்துள்ளீர்கள். அவற்றைப் பற்றி சொல்லுங்களேன்.**

நான் இதுவரை செய்து வந்த வேலைகளைக் கேட்கிறீர்கள். ஆடு மேய்ப்பவனாக, கட்டட பாதுகாவனாகா, சுகாதாரத் தொழிலாளியாக, சுடுகாட்டுக்கு காவலாளியாக, ரிக்ஷா ஓட்டுநராக, சுமை தூக்கும் கூலியாக என்று பலவேலைகளைச் செய்து வந்துள்ளேன். வங்காளதேசத்தில் உள்ள பாரிசாலில் பிறந்தேன். பாஸ்தர் கொல்கத்தா, சிரோமணிப்பூர் முகாம், சிலிகுரி, ஜல்பால்குரி ஆகிய இடங்களுக்குச் சென்று வந்திருக்கிறேன். பல்வேறு கதாபாத்திரங்களின் தொகுப்பாக வாழ்ந்துகொண்டிருக்கிறேன். இதுபற்றி சேரா சேரா ஜீபொன் என்ற பெயரில் நாவல் எழுதியுள்ளேன்.

**நீங்கள் சிறைவாசம் அனுபவத்துள்ளீர்கள் என்று கேள்விப்பட்டோம்.**

ஆம். 1974ஆம் ஆண்டு கலவரம் மற்றும் கொலை முயற்சி வழக்கு என்மீது பதிவு செய்யப்பட்டது. இதன் காரணமாக நான் 26 மாதங்களை சிறையில் செலவு செய்துவிட்டு பின்னர் வெளியே வந்தேன். நீதிமன்ற விசாரணை நீண்டதுதான் சிறைவாசம் அதிகரித்ததற்குக் காரணம்.

**வாசிப்பிற்கும் எழுத்திற்கும் என்ன தொடர்பிருக்கிறது?**

ஒரு மனிதன் வாசிக்க ஆர்வம் காட்டவில்லையென்றால் அவனால் எழுத முடியாது. நீங்கள் நூறு புத்தகங்களை வாசிக்கவில்லை என்றால் உங்களுக்கென சுயமாக ஒரு பத்தி கூட எழுத முடியாது. நூல்களை படிப்பதன் மூலம் செய்திகளை தகவல்களை அறிகிறீர்கள். முக்கியமாக, பல்வேறு கோணங்கள், எழுத்து வடிவ பாணி ஆகியவற்றை வாசித்துத்தான் அறிய முடியும்.

**உங்களுக்குப் பிடித்த எழுத்தாளர்கள் இருந்தால் அவர்களைப் பற்றி கூறுங்களேன்.**

எனக்கு நான்கு எழுத்தாளர்கள் பிடித்தமானவர்கள். மகாஸ்வேதா தேவி, சமரேஷ் பாசு, ஸ்ரீலால் சுக்லா, பினோய் முகோபாத்யாய.

**உங்கள் மனைவியை எங்கே சந்தித்தீர்கள்?**

அவளை முதல்முறை பார்த்தபோது சிலர் அவளை கடத்திச்செல்ல முயன்றனர். நான் தடுத்து காப்பாற்றினேன். இன்றுவரையிலும் எனக்கும் எழுத்துக்கும் துணையாக இருக்கிறாள். நண்பர்களாக அறிமுகமான பிறகு, ஆதரவற்றோர் காப்பகத்தில் வாழ்ந்து வந்தாள். அங்குள்ளவர்கள் நாங்கள் இருவரும் மணம் செய்துகொள்ள விரும்பியதை அறிந்து திருமணம் செய்து வைத்தனர்.

**மேற்கு வங்காளத்தில் சாதி இருக்கிறதா?**

குஜராத், உத்தரப் பிரதேசம், பீகார் போன்ற மாநிலங்களில் உள்ளதைப் போல இங்கு சாதி கடைப்பிடிக்கப்படுவதில்லை. தீண்டாமை என்பது கிடையாது. மேல்சாதிக்காரர்களின் வீட்டில் கீழ்சாதி ஆட்கள் சமையல் வேலை செய்வார்கள். அங்கேயே சாப்பிடுவார்கள். பிரச்னை தொடங்குவது கீழ்சாதி ஆட்களுக்கு கிடைக்கும் கல்வி, வளர்ச்சி, செல்வம்தான். அவர்கள் இப்போது மேல்சாதி ஆட்களுக்கு இணையாக வந்துவிடுகிறார்களே? அவர்கள் வளமாக இருப்பதைப் பார்த்தால் அவர்களின் வளர்ச்சியை தடை செய்ய நினைக்கிறார்கள். மனோரஞ்சன் சாகித்திய விருதுகளை வாங்கி இருக்கலாம். ஆனால் அவன் பிழைப்புக்கு உழைத்தாக வேண்டுமே. அங்குதான் மேல்சாதி ஆட்கள் சிக்கலை ஏற்படுத்துகிறார்கள்.

**நன்றி - டெக்கன் கிரானிக்கல் சுசேதா தாஸ்குப்தா 15 மார்ச் 2020**

**15**

# ”இணையத்திலுள்ள அடிப்படைவாதிகள் மிகவும் ஆபத்தானவர்கள்”

2019ஆம் ஆண்டு மார்ச் 15ஆம் தேதி நியூசிலாந்தில் கிறிஸ்ட்சர்ச்சில் அடிப்படைவாதி ஒருவர் மசூதிகளின் மேல் தாக்குதல் நடத்தினார். மேலும் இத்தாக்குதலை திறமாக திட்டமிட்டு பேஸ்புக்கில் லைவ் செய்தார். இத்தாக்குதலை பல்வேறு தரப்பினரும் பார்த்து அதிர்ந்து போனார்கள்.

வெளிப்படையாக வெளியுலகில் இருக்கும் அடிப்படைவாதிகளை விட இணையத்தில் உள்ள அடிப்படைவாதிகளின் அளவும் எண்ணிக்கையும் அதிகம். இவர்கள் நடத்தும் தாக்குதல்களை அனைவரும் பார்க்கும்படியாகவும் செய்கிறார்கள். இந்த நூற்றாண்டில் நாம் தொலைத்த முக்கியமான விஷயம். குற்றவுணர்வுதான். தனது சந்தோஷம் முக்கியம் என யாரையும் பலிகொடுக்கத் தயங்காத ஆட்கள் உருவாகி வருகிறார்கள். இவர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து வரும் **ஜூலியா எப்னரிடம்** பேசினோம்.

இணையத்தில் ஒளிந்துள்ள தீவிரவாதிகளைக் கண்டுபிடிப்பது எளிதாக இருந்ததா**?**

அவர்களைக் கண்டறிவது மிகவும் கஷ்டம். காரணம், அவர்கள் படுகொலை செய்வது பற்றிய வீடியோ ஒன்றை வெளியிடுகிறார்கள். அதனைக் கண்டறிந்து நீக்குவது மிகவும் கடினம். ஒரு லிங்கை நீங்கள் நீக்கினால் மூன்று லிங்குகளை புதிதாக உருவாக்குகிறார்கள். ட்விட்டர், பேஸ்புக் என நீங்கள் கண்காணித்துக்கொண்டிருப்பீர்கள். அவர்கள் கேப் எனும் சமூக வலைத்தளத்தைப் பயன்படுத்துகிறார்கள். இதில் பெரும்பாலும் வலதுசாரிகள், படுகொலை செய்பவர்கள் இணைந்துள்ளனர். மேலும் இவர்கள் ட்விட்டர் , பேஸ்புக் ஆகிய வலைத்தளங்களிலும் தங்களது கருத்துகளை பதிவிட்டு ஆதரவாளர்களைத் திரட்டுகின்றனர். இதுதொடர்பான ஆதாரங்களையும் வீடியோ வடிவில் வெளியிட்டு மக்களை உணர்ச்சிக் கொந்தளிப்புகளுக்கு உள்ளாக்குகின்றனர்.

வலதுசாரி குழுக்களை அணுகி எப்படி பேசினீர்கள்?

ஜெனரேஷன் ஐடென்ட்டி போன்ற வலதுசாரி குழுக்களுக்கு சமூக வலைத்தளங்களில் பல்வேறு ஆதரவுக்குழுக்கள் இருந்தன. நான் அவர்களிடம் அறிமுகமாக அவர்களின் திட்டங்களை ஆராய்ந்தேன். அவரகளிடம் இதுபற்றி கேட்டபோதும், அவர்களில் ஒருவர், அமைப்பின் உறுப்பினர் என்ற முறையில் பதில்களை அளித்தனர். அவர்கள் பயன்படுத்தும் குறியீட்டு மொழி பற்றி மெல்ல அறிந்துகொண்டேன்.

## இக்குழுக்களில் உள்ளவர்கள் ஆபத்தானவர்களா?

இணையத்தில் உள்ள வலதுசாரி குழுக்கள், தங்களுடைய குழுவில் உள்ளவர்களைப் பற்றியும் அவர்களுடைய குடும்பங்களைப் பற்றியும் தகவல் சேகரித்து வைத்திருப்பார்கள். எனக்கு இருந்த பயமே அவர்கள் என்னுடைய உண்மையான அடையாளத்தை கண்டுபிடித்துவிடுவார்களோ என்பதுதான். எளிதாக குழுக்களை கூட்டவும் ஒருவரை நெருங்கவும் முடியும் திறன் பெற்றவர்கள் இவர்கள்.

நீங்கள் உங்கள் நூலில் சிங்கப்பூரின் மீது ஒருவர் பல கி.மீ. தூரம் தள்ளியிருந்து தாக்குதல் நடத்த முயன்றார் என்று கூறியிருக்கிறீர்கள். இத்தாக்குதலை நாம் தடுக்க முடியாதா?

தாக்குதல் நடத்த திட்டமிட்ட தகவல்தான் நமக்குத் தெரியும். இதற்கு திட்டமிட்ட முக்கியமான ஆளை நீங்கள் பிடிக்கவே முடியாது. பாதுகாப்பு அமைப்புகள் அவர்களைக் கண்காணிக்கிறது என்பது அவர்களுக்கும் தெரியும். அதனால் அவர்கள் பல்வேறு பாதுகாப்பான மென்பொருட்களைப் பயன்படுத்துகிறார்கள். நிறைய சேனல்களை உருவாக்கி தகவல்களைப் பரிமாற்றம் செய்கிறார்கள். அவர்கள் தீவிரவாத செயல்களுக்கென பல்வேறு ஆட்களை தூண்டிவிட்டு தயார் செய்கிறார்கள். இவர்களுக்கு கூட தங்களின் தலைவர் யார் என்று தெரியாது. அந்தளவு திறமையாக இணையத்தைக் கையாள்கிறார்கள்.

சமூக வலைத்தளங்களில் இயங்கும் இந்தக் குழுக்களை மூட வேண்டும் என ஏன் கூறுகிறீர்கள்?

இவர்கள் வெளிப்பார்வைக்கு தங்கள் கருத்துகளை மென்மையாக முன்வைப்பது போல தெரியும். ஆனால் இவர்கள் இவளை சுடுங்கள் என்று கூற வேண்டுமென்றால், அதை சுற்றி வளைத்து எழுதுவார்கள். காரணம் சட்டச்சிக்கல்கள்தான். தாங்கள் செயல்படும் நாடுகளிலுள்ள பேச்சுரிமைக்கான எழுத்துரிமைக்கான சட்டங்களை இவர்கள் அறிந்து வைத்திருக்கிறார்கள். இதன் விளைவாக எந்த சிக்கலிலும் இவர்கள் மாட்டிக்கொள்வதில்லை. வெறுப்பைத் தூண்டுகிறார் என்பதற்கு யாரும் காவல்நிலையத்தில் புகார் தரப்போவதில்லை. சட்ட ஓட்டைகளைப் பயன்படுத்தி மக்களைத் தூண்டி விடுகின்றனர். இவற்றை தடை செய்தால் அது குறிப்பிட்ட நாட்டில் மட்டும் தெரியாது.பிற நாட்டில் தெரியும். இதன் உறுப்பினர்கள் விபிஎன் பயன்படுத்தி சுதந்திரமாக இத்தளத்தை அணுகுகின்றர்.

**நன்றி - நியூ சயின்டிஸ்ட் மார்ச் 2020**

16

# ”சட்டம் அனைவருக்கும் பொதுவானது”

நிர்பயா வழக்கில் பாதிக்கப்பட்ட குற்றவாளிகள் சார்பாக வாதிட்டு அவர்களுக்கு உரிமைகளைப் பெற்றுத்தந்தவர், **ஏ.பி.சிங்,** இவரை ஊடகங்கள் பலரும் தூற்றினாலும் நான் அரசியலமைப்புச்சட்டம் சாதாரண குடிமகனுக்கு தரும் உரிமைகளைப் பெற்றுத்தர முயற்சிக்கிறேன் என்று கூறுகிறார். அவரிடம் பேசினோம்.

**தற்போது நிர்பயா வழக்கில் மூன்றாவது குற்றவாளியான பவன் குப்தா, தன்னுடைய கருணை மனுவை அனுப்பியுள்ளார். இனி இந்த மனுவுக்குப் பிறகு தூக்கு தண்டனையை தள்ளி வைக்க வாய்ப்பில்லை. அடுத்த என்ன செய்யலாம் என்று நினைக்கிறீர்கள்?**

குற்றவாளிகளுக்கு சட்டரீதியான வாய்ப்புகள் இல்லையென்று உங்களுக்கு யார் சொன்னது? அவர்களது தூக்குதண்டனையைத் தள்ளிவைக்க பல்வேறு விஷயங்களை என்னால் கூற முடியும். ஆனால் அதனை சரியான நேரத்தில் கூறவேண்டும் என காத்திருக்கிறேன். உச்சநீதிமன்றம் எனது வாதிகளின் மனுவை தள்ளுபடி செய்தாலும் நான் அவர்களைக் காப்பாற்ற போராடுவேன். எவ்வளவு தூரம் சட்டம் அனுமதிக்குமோ அவ்வளவு தூரம் அவர்களைக் காப்பாற்ற முயல்வேன்.

**கொடூரமான குற்றம் செய்தவர்கள் அவர்கள். நீங்கள் அவர்களை ஏன் காப்பாற்ற நினைக்கிறீர்கள்?**

நான் என் உள்ளுணர்வை நம்புகிறேன். அவர்கள் வெகுளியான மனிதர்கள் என்கிறேன். வழக்குரைஞராக நான் என் வாதிகளை குற்றத்திலிருந்து காப்பாற்ற நினைக்கிறேன்.

**காவல்துறை அவர்கள் செய்த குற்றத்தை அறிவியல் முறையில் அதாவது டின்ஏ ஆதாரத்தை முன்வைத்து நிரூபித்திருக்கிறார்கள். எப்படி அவர்களை நீங்கள் காப்பாற்ற முடியும்?**

சட்டத்தில் எனது வாதிகளைக் காப்பாற்ற நிறைய வழிகள் உள்ளன. அவற்றை நான் நீதிமன்றத்தில் கூறி என தரப்பு வாதிகளை தண்டனையிலிருந்து காக்க முயல்வேன். குற்றம்சாட்டப்பட்டு சிறையில் இருந்த பவன் குப்தாவை, போலீசார் ஊடக அழுத்தங்களால் குற்றவாளியாக்கி உள்ளனர். இதுபற்றி திகார் சிறை அதிகாரி தான் எழுதிய பிளாக் வாரண்ட் நூலில் கூறியுள்ளார். குற்றம் நடந்ததைப் பார்த்த சாட்சிகள் குற்றவாளிகளை அடையாளம் காட்டும் நிகழ்ச்சி நடைபெற்றது. அதில் சிறை அதிகாரி இல்லாமலேயே நீதிபதி மட்டும் குற்றவாளிகளை பார்வையிட்டிருக்கிறார். இதுபோன்ற ஏராளமான குறைபாடுகள் இந்த வழக்கில் உள்ளன.

**நீங்கள் வழக்கை தாமதப்படுத்துகிறீர்கள் என்று உணர்ந்திருக்கிறீர்களா? உங்களால் பாதிக்கப்பட்ட 22 வயதுப்பெண்ணுக்கு நீதி கிடைக்கவில்லை?**

குற்றம் நடைபெற்றால் அதுதொடர்பாக முதல் தகவல் அறிக்கை பதிவாக வேண்டும். புகாரின் உண்மைத் தன்மையைப் பரிசோதித்து விசாரணை நடைபெறவேண்டும். அனைத்தும் இந்த வழக்கில் நடந்தேறி இருக்கிறதே? இது நம் நாட்டு அரசியலமைப்பு சொல்லும் விஷயம்தான். உரிமைதான். ஆனால் பாதிக்கப்பட்டவர்கள் குற்றவாளிகளை தூக்கிலிடச்சொல்ல எந்த உரிமையும் கிடையாது. நீங்கள் இவர்களுக்கு நீதி கிடைக்கவேண்டும் என்கிறீர்கள். 1984ஆம் ஆண்டு நடைபெற்ற கலவரத்தில் பாதிக்கப்பட்ட ஜெசிகா லால், நிதிஷ் கடாரா, நிகாரி ஆகியோரின் குழந்தைகள் பற்றி கவலைப்பட்டிருக்கிறீர்களா? அவர்களை இந்த சமூகம் ஏன் கைவிட்டது?

அரசியல்வாதிகளின் பலத்தைப் பெற்றிருக்கிற பெரும்பாலான குற்றவாளிகள் எந்த தண்டனைகளுமின்றி தப்பி வருகிறார்கள். அவர்கள் சம்பந்தப்பட்ட வழக்கில் எத்தனை பேருக்கு தூக்கு தண்டனை வழங்கப்பட்டுள்ளது. தண்டனையை தரவேண்டும் என்று சொல்லுகிற உரிமை நிர்பயாவின் அம்மாவுக்கு மட்டும்தான் இருக்கிறதா?நீங்கள் பேசுவது மோசமான ஒரு சார்பு நிலைப்பாடு.

**நன்றி : அவுட்லுக் இதழ்**
**ஆங்கிலத்தில் - ஜீவன் பிரகாஷ் சர்மா**

**குறிப்பு: நிர்பயா வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட குற்றவாளிகளுக்கு குற்றம் உறுதி செய்யப்பட்டு மரணதண்டனை வழங்கப்பட்டுவிட்டது. நான்கு குற்றவாளிகளும் தூக்கிலிடப்பட்டனர்.**

**17**

# ”உணவகங்களில் காசு கொடுத்து சாப்பிடுவதில்லை!”

உணவு சேவைத்துறை இன்று வெகுவாக மாறியுள்ளது. முதலில் உணவு பற்றி வலைத்தளத்தில் அல்லது பத்திரிகையில் எழுதுவார்கள். அதைப்படிப்பவர்கள் அதைப் பின்பற்றி அங்கு சென்று சாப்பிடுவார்கள். இன்று அந்த இடத்தை இன்ஸ்டாகிராம், ட்விட்டர் எடுத்துக்கொண்டுவிட்டது. இதனால் ஏற்பட்ட மாற்றங்களைப் பற்றி உணவுத்துறை விமர்சகரும், எழுத்தாளருமான **வீர சாங்கியிடம்** பேசினோம்.

**உணவுத்துறை எப்படி மாறியுள்ளது?**

முதலில் நாங்கள் உணவகம் சென்று உணவை வாங்கிச் சாப்பிடுவோம். அதுபற்றிய கருத்துகளை பத்திரிகையில் வலைப்பதிவில் எழுதுவோம். இது உணவகத்தின் வியாபாரம் சார்ந்த விஷயம் என்பதால், எங்களுக்கு உணவகங்களில் உணவு விலையின்றி கிடைக்கும். இன்று உணவகங்கள் குறிப்பிட்ட ஊடகங்கள் மற்றும் ஏஜென்சிகளுக்கு பணம் தருகின்றனர். அங்குள்ளவர்கள் வந்து உணவைச் சாப்பிட்டுவிட்டு விமர்சிப்பார்கள். அதுதான் நவீன உலகில் மாற்றம் கண்டுள்ளது. இன்று அவர்களுக்கு இன்ப்ளூயன்சர்கள் என்று பெயர். அவர்கள் சமூக வலைத்தளங்களில் உணவு பற்றி பிரசாரம் செய்வார்கள். எழுதுவார்கள்.

**உணவு சார்ந்த எழுத்தாளருக்கு என்ன தகுதிகள் தேவை?**

உணவு பற்றி எழுதும் எழுத்தாளருக்கு என்ன விஷயங்கள் தேவை என்று நினைக்கிறீர்கள்?

இன்று உணவுத்துறை சார்ந்து விமர்சனம் செய்து எழுதுபவர்களுக்கு பெரிய மரியாதை இல்லை. காரணம் முன்னர் உணவுபற்றி எழுதுவதற்கு நாளிதழ்களில் இடம் கிடையாது. வலைத்தளங்களில் எழுதுவார்கள். இன்று இன்ஸ்டாகிராம் அந்த இடத்தைப் பிடித்து விட்டது. அதனால், இதில் ஒருவர் எழுதுவதையும் புகைப்படம் பிடித்துப்போடுவதையும் ரசிக்கும் கூட்டம் அதிகமிருந்தால் அவர் சூப்பர்ஸ்டாராகி விடுவார். இந்த பின்பற்றும் கூட்டத்தையும் காசு கொடுத்து வாங்கும் போக்கு அதிகரித்து வருகிறது.

எட்டாயிரம் பேர் உங்களை பின்பற்றுகிறார் என்பது உங்களுக்கு பெருமை என்பதை விட உணவுத்துறை சார்ந்த நிறுவனத்திடம் நீங்கள் சிறப்பாக பேரம் பேசி லாபம் பெற முடியும். இதனால் உணவுத்துறை சார்ந்த எழுத்துகளில் நம்பிக்கை குறைந்து வருகிறது.

**உங்களுக்கு இணையத்திலுள்ள இன்ப்ளுயன்சர்கள் மூலம் ஆபத்து ஏற்படுவதாக தோன்றுகிறதா?**

இல்லை. நீங்கள் கூறும் இன்ப்ளுயன்சர்கள் உண்மையில் பெரியளவில் மக்களை ஈர்ப்பதில்லை. உணவகம் பற்றி அறிமுகப்படுத்தும் அளவுக்கு இங்கு யாரும் சிறப்பாக இன்ப்ளுயன்சர் பணியைச் செய்வதில்லை. ஏஜென்சிகளுக்காக அவர்கள் உணவகங்களை விளம்பரம் செய்கிறார்கள் அவ்வளவுதான்.

**உங்களுக்கு உணவகங்களிலிருந்து விமர்சனங்கள் செய்வதற்காக அழைத்திருக்கிறார்களா?**

நான் இந்த அழைப்புகளை ஏற்பதில்லை. இப்படி அழைத்த பிஆர் நிறுவனங்கள் சிலவற்றை போனில் பிளாக் செய்து வைத்துள்ளேன். நிறுவனங்கள் சிலர் தொடங்கும்போது உணவு பற்றி எழுதுபவர்கள், உணவு விமர்சகர்கள், பத்திரிகையாளர்களை அழைத்து இலவசமாக அத்தனை ஐட்டங்களையும் சாப்பிடச் சொல்லுவார்கள். சில வாடிக்கையாளர்களுக்கும் இதுபோல அளிப்பதுண்டு. இதெல்லாம் உணவகத்தைப் பிரபலப்படுத்துவதற்காக செய்யும் வேலைகள்.

**உணவுத்துறை சார்ந்து இயங்குகிறீர்கள். உணவகங்களில் நீங்கள் சாப்பிடும் உணவிற்கு காசு கொடுக்கிறீர்களா?**

முதலில் பதிப்பகம், நாளிதழ் சார்ந்து இயங்கும்போது, உணவிற்கு காசு கொடுப்பார்கள். ஆனால் இன்று நிலைமை மாறிவிட்டது. நாம் எதற்கு உணவகம் பற்றி இலவசமாக எழுதவேண்டும்? அவர்கள் அதற்கு பதிலாக உணவு தவிர்த்து பணம் தரவேண்டுமென நினைக்கிறார்கள். இன்று உணவகங்களில் உணவுக்குப் பணம் கொடுத்து சாப்பிடும் பழக்கம் கிடையாது.

**நன்றி - அவுட்லுக்.**

## 18

# மக்கள்தொகை, குடியுரிமைத் திருத்தசட்டம் தொடர்பான தகவல்கள் எந்த அமைப்புகளுக்கும் அளிக்கப்படாது

**சட்டத்துறை அமைச்சர் ரவிசங்கர் பிரசாத்,** அவர்கள் குடியுரிமை திருத்தச்சட்டம் பற்றி ஊடகங்களுக்கு விளக்கினார். அவரிடம் பேசினோம்.

**குடியுரிமை சட்டத் திருத்தத்தில் அனைத்து மதத்தினருக்கும் சம உரிமை என்பதே இல்லை. மேலும் இதில் முஸ்லீம்கள் இந்தியாவில் வாழ்வதற்கான உரிமை என்பதும் விடுபட்டுள்ளதே?**

குடியுரிமைச்சட்டம் அரசியலமைப்புப் படி சரியானதே. நாட்டிற்கும் மக்களுக்கும் தேவையான சட்டங்களை இயற்ற நாடாளுமன்றத்திற்கு உரிமை உண்டு. இதுபற்றி அரசமைப்புச் சட்டத்தில் 246 இதற்கான வழிகாட்டும் குறிப்புகள் கிடைக்கின்றன.

**நாடாளுமன்றத்திற்கு இருக்கும் அதிகாரமெல்லாம் சரிதான். ஆனால் அதற்காக அங்கு இயற்றப்படும் சட்டம், அரசமைப்புச்சட்டம் அனைவருக்கும் வழங்கும் அடிப்படை உரிமைகளை பறிப்பதாக இருக்கலாமா?**

நாங்கள் சட்டப்பிரிவு 14 படி, குடியுரிமைச் சட்டத்தை உருவாகியுள்ளோம். ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், வங்காளதேசம் ஆகியவற்றிலுள்ள இந்து மக்களுக்கு குடியுரிமை வழங்குவதாக கூறியுள்ளோம். இந்திராகாந்தி, உகாண்டாவில் இடி அமீன் ஆட்சியின்போது அங்கிருந்தவர்களை இந்துக்களாக கருதி குடியுரிமையை அளித்தார்.மேலும் இந்திரா, கிழக்கு பாகிஸ்தானிலுள்ள மக்களுக்கு இந்த முறையில்தான் குடியுரிமை வழங்கினார். ஏன் ராஜீவ் காந்தி கூட இம்முறையில்தான் இலங்கை தமிழர்களுக்கு குடியுரிமை அளித்தார். இப்படி இந்த மசோதாவுக்கு முன்னரே நிறைய எடுத்துக்காட்டுகள் உள்ளன.

**என்ஆர்சி எப்படி நடைமுறைப்படுத்தப்படவிருக்கிறது?**

2003ஆம் ஆண்டு இதற்கான பேச்சுவார்த்தைகள் தொடங்கின. ஆனால் இதுதொடர்பான விவாதம், ஆட்சேபணைகள், கருத்துகள், அறிவுறுத்தல்கள் கிடைத்தன. ஆனால் இன்னும் இந்த திட்டம் நடைமுறைப்படுத்தப்படவில்லை. விதி 4இன் கீழ் குடியுரிமைச்சட்டம் அமல்படுத்தப்படும். இதுபற்றி மாநில அரசுகளிடம் கருத்துகளைக் கேட்டு ஆலோசித்து நடைமுறைப்படுத்தப்படும். அசாமில் என்ஆர்சி உச்சநீதிமன்றத்தில் ஆணைப்படி மீண்டும் அமல்படுத்தப்படும். இந்த நடைமுறைகள் வெளிப்படையானவை. ரகசியம் ஏதுமில்லை.

**என்பிஆர், என்ஆர்சியில் குறிப்பிட்ட ஒருவரின் பெற்றோர் பெயர், அவர் பிறந்த இடம் ஆகியவற்றை கேட்பதாக கூறப்படுகிறதே?**

நீங்கள் கூறும் இரண்டு சட்டங்களுமே காங்கிரஸ் அரசு கொண்டு வந்ததுதான். இன்று அவர்கள் அதனை திரித்து மக்களிடையே பேசி வருகின்றனர். உண்மையில் குறிப்பிட்ட எந்த இனக்குழுவுக்கும் விரோதமான கருத்துகளை இதில் நாங்கள் கூறவில்லை. தேவையற்ற விவரங்களை கேட்கவில்லை. அரசமைப்புச்சட்டத்திற்கு உட்பட்டே இச்செயல்பாடுகளை செய்யவிருக்கிறோம். இதுதொடர்பான தகவல்களை எந்த அமைப்புகளுக்கும் தராமல் அரசே பாதுகாக்கும்.

**மேற்சொன்ன சட்டம் பற்றி உள்துறை அமைச்சர் அமித் ஷாவும், பிரதமர் மோடியும் முரண்பாடாக பேசியுள்ளனரே?**

அமித் ஷா இரண்டு சட்டங்களையும் விளக்கி பேசினார். பிரதமர் மோடி அதனை ஒருங்கிணைத்து பேசியுள்ளார். வேறுபாடு அவ்வளவுதான்.

**உங்களது குடியுரிமைச்சட்டத்தில் இந்துகள் விடுபட வாய்ப்புள்ளதா?**

குடியுரிமைச் சட்டத்தில் இந்துவாக, இந்தியாவில் வாழ்ந்து வந்தவர்களுக்கு குடியுரிமை வழங்கப்படும். அவர்கள் விடுபட வாய்ப்பு இல்லை.

**மாணவர்கள் அரசமைப்புச்சட்டத்தை வைத்தபடி போராடி வருகிறார்களே?**

இந்தியாவில் அமைதி வழியில் போராட அரசு அனுமதிக்கிறது. ஆனால் அவர்கள் அமைதியை குலைக்கும் வழியில் பொதுச்சொத்துக்கு ஆபத்து விளைவிப்பது சரியான செயல்பாடு அல்ல.

**உ.பி அரசு அரசு சொத்துகளுக்கு பாதிப்பு விளைவித்தவர்கள் அதற்கான இழப்பீட்டைத் தரவேண்டுமென கோருகிறதே?**

வரிகட்டும் மக்களின் பணத்தால் வாங்கப்பட்ட பொருட்கள் அவை. அவற்றுக்கு சேதம் விளைவித்தவர்கள் அதற்கு இழப்பீடு தருவது சரியானதுதானே? இதில் நீதிமன்றத்தில் வழிகாட்டுதலும் உண்டு. இதில் அப்பாவிகள் யாரும் பாதிக்கப்பட மாட்டார்கள் என உத்தரப்பிரதேச அரசு கூறியுள்ளது.

**நன்றி : இந்துஸ்தான் டைம்ஸ், 2020**

**19**

# ”கல்வித்துறை சார்ந்த வளர்ந்த வளர்ச்சி மாணவர்களுக்கு உதவுவது இல்லை”

கேரளத்தின் முக்கியமான கலாசார விமர்சகர் **சுனில் பி இளையிடோம்.** எழுதுவதை விட இவரின் பொதுமேடைப் பேச்சு அனைத்து மக்களாலும்

ரசிக்கப்படுகிறது. இவரின் முக்கியமான படைப்பு *political unconsciousness of Modernism*. மார்க்சியத்தை புகழ்ந்து மட்டும் பேசாமல் அதன் பிரச்னைகளை பட்டென போட்டு உடைப்பதோடு அண்மையில் பாஜக முன்னெடுத்து வரும் தேசியவாத வரலாறு, நாராயணகுரு என பொதுமேடையில் அசத்தலாக பேசிவருகிறார்.

இசை, இலக்கியம், நடனம் என்பதைத் தாண்டி தேசியவாதம், அதன் வரலாறு வரை பேசுகிறீர்கள். உங்களது எழுத்திலும் பேச்சிலும் கூட தத்துவத்தின் சாயல் உள்ளது. எப்படி இப்படி ஒரு பாணியை பிடித்தீர்கள்.

கலாசார வரலாற்றில் நவீனத்தன்மையை ஆராய்வதே என்னுடைய பாணி. நான் இதுவரை செய்த ஆராய்ச்சிகளை இம்முறையில் செய்துள்ளேன். ஒரே ஒரு கருத்தை எடுத்துக்கொண்டு அதை நோக்கியே எழுதவேண்டும் பேசவேண்டும் என்பதில்லை.

மார்க்சும் இம்முறையில் எதையும் வலியுறுத்தியவரில்லை. நான் கைக்கொள்ளும் முறையில் தத்துவத்தில் சிக்கிக்கொள்ளும் வாய்ப்பும் உள்ளதால், நான் இம்முறையை அனைவருக்கும் பரிந்துரைக்கவில்லை. மார்க்சிசம் என்பது வேறு. மார்க்சிசவாதியின் கலாசார வரலாற்று ஆர்வம் என்பது வேறு. நான் ஆராய்ச்சியில் ஒன்றை மட்டுமே எடுத்துக்கொள்ள விரும்பவில்லை.

நீங்கள் தெளிவாக கல்வி சார்ந்தும், குடிமக்கள் சார்ந்த பிரச்னைகளையும் அணுகுகிறீர்கள். இதை உங்கள் பேச்சிலும் எழுத்திலும் பார்க்க முடிகிறது. எப்படி சாத்தியமாகிறது?

இன்று கல்வித்துறை சார்ந்த ஆராய்ச்சிகள் அதன் வளர்ச்சிக்கு உதவுவது போல இல்லை. இன்று அனைத்து பல்கலைக்கழகங்களும் குறிப்பிட்ட இனக்குழு சார்ந்த ஆதரவுப்போக்கை கடைபிடித்து வருகின்றன. இதன் காரணமாக, வரலாறு கூட மாற்றப்பட்டு வருகிறது. வரலாற்று ஆய்வாளர் ரொமிலா தாப்பர், இந்தியா கடுமையான ஒழுக்க விதிமுறைகளின்படி உருவாக்கப்பட்டது மகிழ்ச்சி அளிப்பதாக நேர்காணலில் கூறினார். ஆனால் நாம் இன்று பெருமைப்படும்படி நடக்கும் நிகழ்வுகள் இல்லை என்பதே உண்மை. இந்துத்துவவாதிகள் வரலாற்றை முழுமையாக கைப்பற்றி விட்டால் கல்வித்துறைக்கும் குடிமக்களுக்கும் உள்ள தொடர்பு பாலம் உடைந்து போய்விடும்.

**குடியுரிமை திருத்த சட்டம் பற்றிப் பேசும்போது உங்கள் பேச்சில் நம்பிக்கை தென்படுகிறதே?**

அறிவுசார்ந்த தளத்தில் இதுபோன்ற நம்பிக்கை என்பது பொருந்தாது. அரசியல் சார்ந்து செயல்படும்போது, இதுபோல பேசுவது போராட்டத்திற்கு வலு சேர்க்கும். நான் பேசியது நாளை பற்றிய கனவு சார்ந்தது அல்ல.

**இப்போராட்டங்களில் உங்களது அரசியல் சார்புநிலை என்ன?**

தேசியவாதம் இங்கு தோன்றியபோது அதற்கு இருவடிவங்கள் இருந்தன. 1880 மற்றும் 1920களில் இரண்டு வடிவங்களாக அவை உருமாறின. முதலில் இருந்த தேசியவாதத்தில் மதம் கிடையாது. 1920களில் உருவான தேசியவாதத்தில் மதம் வலுவாக இருந்தது. இதனை வளர்த்தெடுத்தவர்கள் காந்தி, மாணவர் இயக்கங்கள், சமூதாய இயக்கங்கள் ஆகியோருக்கும் பெரும் பங்கு உண்டு. பின்னாளில் இதுவே நவீன இந்தியாவின் அடித்தளமானது.

இதனை அடிப்படையாக கொண்டுதான் சாவர்கர், தீன்தயாள் உபாத்யாயா ஆகியோர் தேசியவாத தந்தையானார்கள். அதன் பின்னணியில்தான் இன்று நீ இந்தியனா என்று கேள்வி கேட்டு இந்து என அவர்களே பதில் சொல்லி வருகிறார்கள்.

**அரசமைப்பு சட்டம் தொடர்பான கேள்விகளை இன்று கேட்டு விவாதித்து வருகிறோம். இதுபோன்ற விவாதங்களை நாம் முன்னரே தொடங்கவில்லை. இதனால்தான் நமது ஜனநாயக அமைப்புகள் சரிவைச் சந்தித்தனவா?**

உண்மைதான். நாம் தாமதமாகத்தான் அரசமைப்புச்சட்டத்தில் உள்ள அம்சங்களை விவாதிக்கத் தொடங்கியுள்ளோம். இதில் ஏற்பட்ட தாமதத்தில்தான் பிராமணிசம் மற்றும் மனுஸ்மிருதி உள்ளே நுழைக்கப்பட்டு சமூக கட்டமைப்புகளையே மாற்றிவிட்டது. இன்று நாம் போராட்டங்களில் பயன்படுத்தும் தேசிய கீதம் மாறவில்லை. அதனை பயன்படுத்தும் விதம் மாறிவிட்டது. அரசமைப்புச் சட்டமும் கூட அப்படித்தான் உள்ளது.

ஆங்கிலத்தில் ரபீக் இப்ராகிம்

நன்றி - பவுன்டைன் இங்க் இதழ்

## 20

## ”இந்தியாவைச் சேர்ந்தவன் என்ற முறையில் பன்மை கலாசாரத்தை நான் விரும்புகிறேன்”

சத்யா நாதெள்ளா, இந்தியாவைச் சேர்ந்தவர் என்ற பெருமையைத் தாண்டி, புகழ்பெற்ற நிறுவனத்தின் தலைமை செயல் அதிகாரியாக சாதித்த சாதனைகள் அதிகம். மைக்ரோசாப்டின் குறைகளை உள்ளபடியே ஏற்றுக்கொண்டு அந்நிறுவனப் பிரிவுகளை ஒருங்கிணைத்து நிறுவனத்தை வெற்றிகரமாக நடத்தி வருகிறார் சத்யா. அவரிடம் டெக் துறை, வளர்ச்சி, இந்தியா பற்றி பேசினோம்.

**செயற்கை நுண்ணறிவு பற்றி நீங்கள் கருத்து தெரிவித்திருந்தீர்கள். அதாவது, அத்துறைக்கான விதிகளை வகுக்குமாறு பேசியிருந்தீர்கள். டெக் நிறுவனங்கள் பயனர்களின் பிரைவசி விஷயங்களை சரியாக கடைபிடிக்கின்றனவா?**

தொழில்நுட்பம் என்பது ஒரேமாதிரிதான். ஆனால் அதனை கடைப்பிடிக்க சில விதிமுறைகள் தேவைப்படுகின்றன. உணவுபாதுகாப்புத் துறைக்கு விதிகள் இருப்பது போலவே, விமானத்துறைக்கும் விதிகள் உண்டு. அதேபோல செயற்கை நுண்ணறிவு துறைக்கும் தனியான விதிகள் இயற்றப்படவேண்டும்.

பயனரின் அந்தரங்கம் என்பது அவரின் உரிமை. அது பாதுகாக்கப்படவேண்டும். நாங்கள் ஐரோப்பாவின் விதிமுறைகளை உலகம் முழுக்க பின்பற்றுகிறோம். கடுமையான விதிமுறைகளை விதித்தால் அவை டெக் நிறுவனங்களுக்கு கடுமையான செலவை வைக்கும். இதன் விளைவாக அவர்கள் மக்களுக்கு அளிக்கும் சேவையின் விலையை கூட்டவேண்டி இருக்கும். வணிகத்தைக் காப்பாற்ற வேறு வழியே கிடையாது.

**சுகாதாரம், கல்வி, விவசாயம் ஆகிய துறைகளில் தொழில்நுட்பங்கள் அதிகரிக்கவேண்டும் என்று கூறியிருக்கிறீர்கள். இந்தியா அதுபோன்ற தொழில்நுட்பங்களை மேம்படுத்தி உலகிற்கு வழங்கவேண்டும் என்று கூறவருகிறீர்களா?**

நுகர்வோருக்கான பொருட்களைச் செய்வது தப்பில்லை. ஆனால் அதனை விரிவாகச் செய்யவேண்டும் என்று நினைக்கிறேன். முதுகெலும்பு காயமுற்றவர்களுக்கு எக்சோகெலிட்டன் போன்ற சாதனங்களை வட அமெரிக்காவில் கண்டுபிடித்திருக்கின்றனர். நான் இதுபோன்ற தொழில்நுட்பங்களை இந்தியர்கள் உருவாக்கி இருக்கி சாதனைகள் செய்ய வேண்டும் என்ற நினைக்கிறேன். புதிய  கண்டுபிடிப்புகளை அவர்களாகவே உருவாக்குவார்கள் என்ற நம்பிக்கை எனகிருக்கறது.

**ஜனநாயக கட்சி வேட்பாளர்கள் நேரடியாகவே டெக் நிறுவனங்களை முடக்கவேண்டும் என்று கூறியுள்ளனரே? குறிப்பாக மக்கள் அதிகம் இணைந்திருக்கும் பேஸ்புக்குக்கு இதுபோன்ற எதிர்ப்பு அதிகம் வருகிறது.**

மக்களுடைய தேவைகளை நாங்கள் குறிப்பிட்ட கட்டணத்தில் தருகிறோம். அச்சேவையில் அவர்களின் திருப்தி எங்களுக்கு முக்கியம். இப்படித்தான் டெக் நிறுவனங்கள் வளர்ந்தன. அந்தந்த நாட்டில் அரசுகளின் விதிமுறைகளின்படியே டிஜிட்டல் டெக் நிறுவனங்கள் செயல்படுகின்றன. வெறுமனே குற்றச்சாட்டு  இல்லாமல் தவறுகளை எதிர்தரப்பு நிரூபிப்பது முக்கியம்.

**குடியுரிமைச் சட்டம் பற்றி நீங்கள் கூறிய கருத்து கடுமையாக விமர்சிக்கப்பட்டது. இதுபற்றி தங்கள் கருத்து என்ன?**

ஒவ்வொரு நாட்டிற்கும் கொள்கைகள் வகுப்பது பற்றிய உரிமை, அதிகாரம் உள்ளது. நாட்டிற்கான அகதிகள கொள்கை மற்றும் தேசிய பாதுகாப்பு என்பது முக்கியமானது. இதுபற்றிய கொள்கைகளை அரசு மக்களின் ஒப்புதல் பெற்று அமலாக்க வேண்டும். நான் இந்தியாவில் பிறந்து வளர்ந்தவன். அதன் பல்வேறு பன்மை இனக்குழு கலாசாரங்களின் மதிப்புகளை அறிந்தவன். எனவே இந்தியாவின் தன்மை, கலாசாரம் மாறிவிடக்கூடாது என்று பேசினேன். அதுவே உண்மை. இந்தியாவில் பிறந்துவளர்ந்தவர்கள், அதனை நேசிப்பவர்கள் வேறு எப்படி பேச முடியும்?

**முகேஷ் அம்பானி உங்கள் நிறுவனம் பற்றியும், வணிகத் தொடர்பு பற்றியும் அதிகம் ஈடுபாடு காட்டுகிறாரே?**

முகேஷ் அம்பானி எங்களது நிறுவனத்தில் க்ளவுட் தொழில்நுட்பம் பற்றி அறிந்துகொள்ளவும் அதனை எப்படி பயன்படுத்துவது என்றும் அறிவதில்

ஆர்வம் கொண்டிருந்தார். நடுத்தர தொழில்நிறுவனங்களுக்கு பயன்படும் பல்வேறு தொழில்நுட்ப வசதிகளை மைக்ரோசாப்ட் ரிலையன்ஸ் நிறுவனங்களுக்கு அளித்து வருகிறது. விரைவில் நாங்கள் அவர்களின் நுகர்பொருள் விற்பனை நிறுவனங்களுக்கு தொழில்நுட்ப வசதிகளை அளிக்கவிருக்கிறோம்.

**மைக்ரோசாப்ட் நிறுவனத்தின் கலாசாரத்தை மாற்றி இருக்கிறீர்களே?**

நீங்கள் தினசரி காலையில் எழும்போது உங்கள் மனநிலை ஒன்றுபோலவே இருப்பதில்லை. பல்வேறு சம்பவங்கள் உங்கள் மனநிலையில் தாக்கம் செலுத்தும். நிறுவனமும் அப்படித்தான். நிறுவனத்தின் வளர்ச்சி பற்றிய நோக்கம் தெளிவாக இருந்தால், குழுவை திட்டமிட்டு அதை நோக்கி செலுத்த முடியும். தனிநபர்களுக்கு என்ன விதியோ அதைத்தான் அப்படியே நிறுவனங்களுக்கும் மாற்றுகிறோம். கலாசாரம் என்பது காலத்திற்கேற்ப மாறுவது அப்படியே வைத்துக்கொள்ள முடியாது.

**நன்றி - எகனாமிக் டைம்ஸ்**

19

# நீதிவெல்லும் என்ற நம்பிக்கை எனக்குண்டு!

**பிரிஜேஷ்குமார்,** ஐஐடி குவகாத்தியில் உதவி பேராசிரியராக பணியாற்றி வருகிறார். 2011ஆம் ஆண்டிலிருந்து மின் மற்றும் மின்னணு பொறியியல் துறையில் பணி. இவர் கற்பித்தலுக்காக உலகிற்கு தெரியவரவில்லை. தனது மேலதிகாரிகள் ஐஐடியில் செய்த பல்வேறு ஊழல்கள் முறைகேடுகளை வெளியே சொல்லி  உலகம் அறிய வைத்தார். அதற்காகவே பிரிஜேஷ் பெயர் அனைவராலும் கூறப்பட்டது.

உண்மையைப் பேசினால் சாதாரண மனிதருக்கு என்ன ஆகும் என்பதற்கு பிரிஜேஷ் மிகச்சிறந்த உதாரணம். நிர்வாகத்திற்கு எதிராகவும், அதில் செல்வாக்கு உள்ள மனிதர்களைப் பகைத்துக்கொண்டதால் அவர் தான் தங்கியுள்ள இடத்தை விட்டு உடனே காலி செய்துகொள்ள கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். மேலும் அவரது பணியிலிருந்து கட்டாய ஓய்வு அளிக்கப்பட்டுள்ளது. இதற்கும் மேலாக அவருக்கு மன உளைச்சல் அளிக்கும்படியாக, அவர்மீது காவல்துறையில் வழக்கு தொடரப்பட்டுள்ளது. ஐஐடியில் பெருகும் ஊழல், இந்துத்துவ நடவடிக்கைகள் பற்றி பேசினோம்.

**ஐஐடி நிர்வாகம் உங்கள் மீது வழக்கு பதிந்துள்ளது. இந்த நடவடிக்கைகளை நீங்கள் எப்படி எதிர்கொள்ளப் போகிறீர்கள்?**

வழக்கு பற்றி விவரங்கள் எனக்கு கிடைத்தபோது நான் பனாரசில் இருந்தேன். அதாவது ஜனவரி 3அன்று எனக்கு வழக்கு பற்றிய விவரங்கள் கிடைத்தன. அதற்கு அடுத்தநாள் எனக்கு நிர்வாகம் அனுப்பிய மின்னஞ்சலில் நான் என் குடியிருப்பை காலி செய்து தரவேண்டும் என கூறப்பட்டிருந்தது. இந்த உளவியல் ரீதியான மனநெருக்கடி மூலம் நான் தவறுகளை செய்வேன் என நிர்வாகத்தினர் நினைத்தனர். நான் என்மீது தொடரப்பட்ட வழக்கிற்கு எதிராக பிணை பெற்றுள்ளேன். விரைவில் இதுதொடர்பான விசாரணை நடைபெற உள்ளது.

**உங்கள் மீது தொடரப்பட்ட வழக்கு பற்றி சொல்லுங்கள்.**

ஐஐடியைச் சேர்ந்த அதிகாரிக்கு நான் மிரட்டல் கடிதம் எழுதியிருப்பதாக வழக்கு பதிவு செய்துள்ளனர். ஆனால் அதில் உள்ள கையெழுத்து என்னுடையதில்லை. அதனை போலியாக பதிவு செய்து மிரட்டல் கடிதத்தை திறமையாக உருவாக்கியுள்ளனர். குறிப்பிட்ட அதிகாரி பற்றி நிறுவனத்தில் எந்தி நல்லபெயரும் கிடையாது. பல்வேறு ஊழல் விவகாரங்களில் பேசப்பட்டு வருபவர். நிறுவனத்தின் போர்டு கூட்டங்களில் எந்த  அழைப்புமின்றி

கலந்துகொண்டு வருகிறார். அவர்தான் இதற்கு பின்னால் உள்ளார் என்று எனக்குத் தெரியும்.

**ஐஐடி மாதிரியான நிறுவனங்கள் ஊழல் என்பது பெரிய விஷயமல்ல. ஆனால் நீங்கள் எப்படி ஊழல் நடைபெறுவதைக் கண்டுபிடித்தீர்கள்?**

2012 ஆம் ஆண்டு நிறுவனத்திற்கு வாங்கிய ஸ்டாக்குகளை பற்றி கணக்குகளை சோதித்தேன். அதில் பத்து கோடி ரூபாய்க்கு பொருட்களை வாங்கியதாக கூறப்பட்டிருந்தது,  கருவிகள், கணினி, பிளாப்பிகள் என எந்த பொருட்களும் பயன்பாட்டுக்கு வரவில்லை. ஏழைநாடான இந்தியாவில் பத்து கோடி ரூபாய் என்பது சாதாரண பணமா? புற்று நோயாளிகளுக்கு செலவழித்தால் நிறையப் பேரை பிழைக்க வைக்க முடியுமே என்றுதான் நான் யோசித்தேன். இந்த தகவல்களை யாரிடம் சொல்லுவது என்று நெனக்கு புரியவில்லை. இந்த பிரச்னை இந்த ஒரு துறையில் மட்டுமல்ல. பல்வேறு துறைகளிலும் புகழ்பெற்று வருகிறது. ஊழல் செய்து மக்கள் வரிப்பணத்தை கொள்ளையடிப்பதில் அனைத்து அதிகாரிகளும் ஒற்றுமையாக செயல்படுகிறார்கள்.

**2017 ஆம் ஆண்டு நீங்கள் ஐஐடியில் நடைபெற்ற பணியிடங்களில் ஊழல் நடைபெறுகிறது என்று கூறியுள்ளீர்கள். இதற்கு எதிர்வினையாக ஐஐடி நிர்வாகம் உங்களுக்கு நோட்டீஸ் அனுப்பி விளக்கம் கேட்டுள்ளதே?**

2017ஆம் ஆண்டு ஐம்பது பேர் ஐஐடியில் நியமனம் செய்யப்பட்டார்கள். இவர்களின் நியமனம் இஸ்ரோ நிறுவனத்தோடு தொடர்புடையது என்பதோடு இந்த பணியிடங்கள் அரசின் விதிமுறைகளுக்கு விரோதமாக செய்யப்பட்டது. நியமிக்கப்பட்ட ஐம்பது பேர்களும் தலா பத்து லட்சம் கொடுத்து பணியில் சேர்ந்ததாக கூறப்பட்டு வந்தது. நான் இதுபற்றி தகவல்களை சேகரித்தபோது இச்செயல்பாட்டில் பல்வேறு முரண்பாடுகள் நிலவி வந்ததை அடையாளம் கண்டேன்.

2011-12 ஆண்டு தொடங்கியே இந்த முரண்பாடுகள் இங்கு நடைபெற்று வருகின்றன. இம்முறையில் 200 பேர் பணம் கொடுத்து காத்திருப்போர் பட்டியலிலிருந்து பதவியைப் பெற்றுள்ளனர். இஸ்ரோ வெளியிட்ட பணியிடத்திற்கான விதிகளை சற்று தளர்த்தி ஊழல் நடைபெற்றுள்ளது.

**தற்போதைய இயக்குநர் டி.ஜி. சீதாராம் மீது ஊழல் புகாரை நீங்கள் எழுப்பியுள்ளீர்கள். இப்போதுதான் ஊழல் என்பது இங்கு இருக்கிறதா? அல்லது காங்கிரஸ் ஆட்சியின்போதே ஊழல் பெருமளவு நடந்து வந்ததா?**

ஊழல்களுக்கு கட்சி பேதம் கிடையாது. ஆனால் சீதாராம் ஆர்எஸ்எஸ் கருத்தியல் கொண்டவர். பிரதமருக்கு தனிப்பட்ட யோகா ஆசிரியராக இருந்தவர். இவர் தனது அரசு குடியிருப்பை மட்டும் இருபது லட்சம் செலவிட்டு புதுப்பித்தோடு தேவையின்றி ஏராளமான நாற்காலிகளை மேசைகளை அரசு பணத்தில் வாங்கியுள்ளார். மேலும் இந்த ஊழல்களைப் பற்றி குடியரசுத்தலைவர், பிரதமர் என பலருக்கும் கடிதங்களை எழுதியுள்ளேன். ஆனால் எவரும் எதையும் கண்டுகொள்ளக்கூடாது என்ற முடிவில் இருக்கின்றனர். இன்று அரசு அமைப்பில் நடைபெறும் ஊழல்களைப் பற்றி பேசினால் தேசவிரோதி, கம்ப்யூனிஸ்ட் என்கிறார்கள். ஆர்எஸ்எஸ் விழாவில் கலந்துகொள்கிறவர்கள் தேசியவாதி, தேசப்பற்று உடையவர் என போற்றுகிறார்கள்.

**இந்தியாவிலுள்ள அனைத்து கல்வி நிறுவனங்களும் காவிமயப்படுத்தப்படுவதாக புகார் எழுந்துள்ளது. ஐஐடி குவகாத்தி எப்படி செயல்படுகிறது?**

பிற கல்வி நிறுவனங்களைப் போலத்தான் இந்த நிறுவனமும் உள்ளது. இந்த மாற்றங்களை எதிர்க்கும் என் போன்றவர்களை தேசவிரோதி என்றும் கம்ப்யூனிஸ்ட் என்றும் முத்திரை குத்தி பல்வேறு இடையூறுகளை மன உளைச்சல்களை ஏற்படுத்துகின்றனர். நான் செய்யும் பணி பற்றி கேட்டால் நான் விளக்கம் தர தயாராக இருக்கிறேன். என்னுடைய கருத்தியல் பற்றி கேள்வி எழுப்பப்படுவது வித்தியாசமாக இருக்கிறது. அதற்கும் நான் இவர்கள் மீது எழுப்பிய புகார்களுக்கும் என்ன தொடர்பிருக்கிறது?

கல்லூரி வளாகத்தில் ஆர்எஸ்எஸ் அமைப்பைச் சேர்ந்தவர் சிவன் கோவிலைக் கட்டினார். அதற்கான அனுமதி யாரிடம் பெறப்பட்டது, கட்டுமானத்திற்கான நிதி ஆகிய விஷயங்கள் பரம ரகசியமாக வைக்கப்பட்டிருந்தது. தொழில்நுட்ப மையம் கற்பித்தலுக்கு கவனம் செலுத்தவேண்டும். எதற்கு கோவில் கட்டுகிறீர்கள் என்று நிர்வாகத்திடம் கேட்டேன். உடனே அவர்கள் என்னை இந்துவுக்கு எதிரானவன் என்று முத்திரை குத்தி தனிமைப்படுத்த தொடங்கினர்.

பிரம்மபுத்திரா ஆற்றைக் கடந்தால் காமகியா கோவில் உள்ளது. அதுமட்டுமன்றி இங்கு ஏராளமான கோவில்கள் உள்ளன. பக்தர்கள் அங்கு செல்ல முடியுமே? எதற்கு கல்வி மையத்தில் கோவில். அது பல்வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள் படிக்கும் மையத்தை பிளவுபடுத்துமே என்று கூறினால் நிர்வாகத்தினர் கோபமுறுகின்றனர். கோவிலுக்கு எதிராக 2019இல் தகவல்களைத் திரட்டி உயர்நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்துள்ளேன்.

**உங்களது குடும்பம் உங்களது செயல்பாட்டை எப்படி பார்க்கிறார்கள்? ஐஐடி நிர்வாகத்தின் நடவடிக்கை உங்களை பாதித்துள்ளதா?**

எனது நற்பெயருக்கு களங்கம் விளைவித்து மன உளைச்சல் ஏற்படுத்தும் முயற்சிகளை செய்து வருகிறார்கள். ஆனால் நீதி வெல்லும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. மேலும், நான் நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்தவன்தான். மிகவும் கஷ்டப்பட்டு படித்து முன்னேறி வந்தவன். என் பெற்றோர் ஆசிரியர் பணி புனிதமானது என்று கூறி என்னைப் படிக்க வைத்தனர். நான் அதனைப் பின்பற்றி வருகிறேன். என் மாணவர்களுக்கு இதைப் பற்றி வலியுறுத்தி வருகிறேன்.

என் மீது அவதூறு ஏற்படுத்தும் சீதாராமை நீதிமன்றத்தில் சந்திப்பேன். அதில் எந்த சந்தேகமும் இல்லை.

**நன்றி – சயின்ஸ் வயர்**
**ஆங்கிலத்தில்: கௌரவ் தாஸ்**

## 21

# எனக்கு கிடைத்த விருது பிராந்திய எழுத்தாளர்களை ஊக்குவிக்கும்

**பென்யாமின்** எழுதிய அல் அரேபியன் நாவல் ஃபேக்டரி, ஜாஸ்மின் டேஸ் ஆகிய இரு நாவல்களும் வாசகர்களுக்கு இடையே பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன. ஒன்றின் தொடர்ச்சியாக நீளும் இரு நாவல்களிலும் மத்திய கிழக்கில் ஏற்பட்ட அரேபிய வசந்தம் எனும் போராட்டம் பற்றிய மையத்தைக் கொண்டுள்ளன. 2014ஆம் ஆண்டு மலையாளத்தில் வெளியான நூல் 2018ஆம் ஆண்டு ஜேசிபி எனும் இலக்கிய விருதைப் பெற்றது. இதன் மையம் அரசுக்கு எதிரான கிளர்ச்சி, வன்முறை, மக்கள் போராட்டத்தைப் பற்றியது. இதனை இந்தியாவுக்கும் கூட நினைத்துப் பார்க்கமுடியும். ஏனெனில் இங்கும் அரசுக்கு எதிரான போராட்டங்கள் கொரோனாவை விட தீவிரமாக நடைபெற்று வருகின்றன.

**இப்போது என்ன எழுதிக்கொண்டிருக்கிறீர்கள். தற்போதைய இந்திய அரசியல் பொருளாதார சூழல் உங்களுக்கு எழுதுவதற்கு உதவுகிறதா?**

இன்று இந்தியாவில் உள்ள அரசியல் நிலைமை பற்றிய நூல்கள் அடுத்த பத்தாண்டுகளில் அதிகம் வெளிவரும். நான் தற்போது கேரளத்திலிருந்து மலேசியாவிற்கு இடம்பெயர்ந்த மக்களின் பயணம் பற்றி யோசித்து வருகிறேன். அவர்களின் வாழ்க்கை. இடம்பெயர்வு பற்றி எழுத திட்டம் உள்ளது.

**உங்களது அல் அரேபியன் ஃபேக்டரி நாவலைப் படித்தால் அதிலுள்ள சர்ரியல் தன்மை அப்படியே இன்று இந்தியாவில் உள்ள நிலைமையை ஒத்துள்ளதே?**

நான் இந்த நாவலை எழுதும்போது இந்தியாவில் இப்படியொரு நிலைமை ஏற்படும் என்று நினைத்து எழுதவில்லை. இந்தியா அனைவருக்கும் சுதந்திரமான உரிமைகளை அங்கீகரித்த செயல்படுத்திக்கொண்டிருந்த

நாடு. ஆனால் அனைத்து விஷயங்களும் திடீரென மாறிவிட்டன. பயமும் பதற்றமும் மக்கள் மனதில் குடிகொள்ளத் தொடங்கிவிட்டது. அரசின் மோசமான நடவடிக்கைகளை யாரும் வெளிப்படையாக விமர்சிக்க தயங்கும் அளவு நிலைமை மாறிவிட்டது. ஆனாலும் எனக்கு நம்பிக்கை உள்ளது. இளைஞர்கள் தெளிவாகவும் உறுதியாகவும் போராடி வருகிறார்கள். தெருவில் இறங்கி ஜனநாயகத்தைக் காப்பாற்ற போராடும் அவர்களுக்கு என்னுடைய ஆதரவு உண்டு.

## உங்களுடைய நூல்களை மொழிபெயர்ப்பவர்களுடன் என்ன மாதிரியான உறவைப் பேணி வருகிறீர்கள்?

நான் மொழிபெயர்ப்பில் பெரிதாக தலையிடுவதில்லை. காரணம் ஒரு கலாசாரத்திலிருந்து மற்றொரு கலாசாரத்திற்கு நூல்களை மறுவடிவமைப்பு செய்வது எளிதான காரியமல்ல. மலையாளத்தில் எழுதிய என்னுடைய நூல்களை ஆங்கிலத்திற்கு கொண்டு சென்றபின்தான், நிறையப் பேர் அதனை வாசிக்கத் தொடங்கினார்கள். நூலை மொழிபெயர்க்கும்போது சில சந்தேகங்களைக் கேட்டார்கள். அதனை விளக்கி, தீர்த்து வைத்து என்னுடைய தரப்பில் சில திருத்தங்களைச் சொன்னேன். மொழிபெயர்ப்பில் என்னுடைய பணி அவ்வளவுதான். என்னுடைய இரு நூல்களையும் செம்மையாக மொழிபெயர்த்தவர் ஷாநாஸ் ஹபீப். நியூயார்க்கிலுள்ள இந்த பெண்மணி மொழிபெயர்ப்பை இலகுவாகவும் சிறப்பாகவும் செய்திருந்தார். அவருக்கு என் நன்றி.

## மொழிபெயர்ப்பு மூலம் நீங்கள் உலகளவில் கவனம் பெற்றுள்ளீர்கள். இதன்மூலம் மலையாளத்தில் எழுதும் விஷயங்கள் ஏதேனும் மாறியிருக்கிறதா?

நான் வெளியிட்ட நூல்கள் புகழ்பெற்றதற்கு முக்கியக் காரணம் அவை வெளியிடப்பட்ட நேரம்தான். 2014இல் மலையாளத்தில் வெளியிடப்பட்ட நாவல், அவ்வளவு எளிதாக பாராட்டுகளைப் பெறவில்லை. இன்று என் நாவல்கள் ஆங்கிலத்தில் புகழ்பெற்றபிறகு மலையாளத்திலும் அதனை வாசிக்கின்றனர். காரணம், அனைத்து மக்களின் வாழ்க்கையையும் ஓர் நாவல் பிரதிபலித்துவிட முடியாது. கோட் டேஸ் எனும் முதல் நாவலை எழுதும்போது மலையாள பழமொழிகளை என் இயல்புப்படி பயன்படுத்தினேன். ஆனால் இன்று என்னுடைய பழமொழிகள், மலையாள நிலத்திற்குரிய சொற்களை பயன்படுத்தும்போது அதனை பிற மொழிகளில் மொழிபெயர்க்க

முடியுமா என யோசித்தே எழுதுகிறேன். கலாசாரம் வேறு என்பதால் பிறமொழி மக்களையும் சேர்த்து யோசிக்க வேண்டியுள்ளது.

**நீங்கள் பெற்ற விருது மூலம் நடந்த மாற்றங்கள் என்ன?**

பிராந்திய ரீதியாக எழுதப்பட்ட நாவல் புகழ்பெற்ற இலக்கிய பரிசை வென்றது மொழிபெயர்ப்புக்கு உதவுகிறது. இன்று நான் மலையாளத்தில் எழுதினாலும் கூட அதனை பிற மொழிகளுக்கு மொழிபெயர்க்க பதிப்பாளர்கள் தயாராக காத்திருக்கிறார்கள். ஐரோப்பா, லத்தீன் அமெரிக்கா என பல்வேறு உலக நாடுகளுக்கும் என்னுடைய நாவல் ஆங்கிலம் மூலம் சென்றிருக்கிறது. இந்த விருது மூலம் பிராந்திய இலக்கியம் வளரும். அந்த எழுத்தாளர்களுக்கு ஊக்கம் கிடைக்கும் என நம்புகிறேன்.

**நன்றி - டெக்கன் கிரானிக்கல் மார்ச் 22, 2020 – நேகா பட்**

உதவியவை

லிப்ரே ஆபீஸ்
என்ஹெச்எம் ரைட்டர்
பாத்வேஸ் வலைத்தளம்
கன்வா வலைத்தளம்
தேசிய நாளிதழ்கள்

நன்றி

தோழர் பாலபாரதி
குங்குமம் முதன்மை ஆசிரியர் கே.என். சிவராமன்
குங்குமம் டாக்டர் கதிரவன் கருணாநிதி
முத்தாரம் சூர்யகுமார்
கார்ட்டூன் கதிர்
கணியம் சீனிவாசன்
பிரதிலிபி திலீபன்